# மிராசுதார்

(நாடகம்)

நடிகவேள்
திரு டி. கே. ஷண்முகம்
அவர்கட்கு
என் அன்பளிப்பு.
பி. எக்ஸ். ரங்


ஆசிரியர்:

பி. எக்ஸ். ரங்கசாமி, பி. ஏ.,



கிடைக்குமிடம்:

காலேஜ் புக் ஸ்டால்,

57, ஹைரோடு, :: திருநெல்வேலி சந்திப்பு.

"வளர்மதி" வெளியீடு.

முதற் பதிப்பு செப்டம்பர் 1951.



'முத்தமிழ்க் கலா வித்துவரத்தினம்'
அமரர் அவ்வை சண்முகம் அவர்கள் நினைவாக
மதுரை காமராஜ் பல்கலைக் கழகத்துக்கு
அன்புடன் அளிக்கப்பட்டது.

**27–1–1979**



**விலை ரூபாய் ஒன்று.**

# பதிப்புரை

திரு. பி. எக்ஸ். ரங்கசாமி அவர்கள் எழுத்தாளர் உலகிற்குப் புதிதல்ல. அருமையான சிறு கதை எழுத்தாளர். நாடக ஆசிரியருங்கூட. ஏற்கனவே அவர்கள் எழுதிய பல சிறு நாடகங்கள் திருச்சிராப்பள்ளி, சென்னை வானொலி நிலையங்களில் ஒலி பரப்பப்பட்டிருக்கின்றன. திரு. டி. கே. எஸ். சகோதரர்கள் நடத்திய நாடகப் போட்டியில் பரிசு பெற்ற நாடகங்களில் அவர்கள் எழுதிய "வீரப் பெண்" என்ற சரித்திர நாடகமும் ஒன்று.

"மிராசுதார்" புரட்சிக் கருத்துக்கள் கலந்த கற்பனை நாடகம். ஆகவே படிப்பவர்களை இது கவருமென்பதற்கு ஐயமில்லை.

இந்நூலை வெளியிட உரிமையளித்த ஆசிரியருக்கு என் நன்றி!

பாளையங்கோட்டை
2—10—51.

T. சுந்தராஜ்.

# நாடகத்தில் தோன்றுபவர்கள்.

**சுந்தரம் பிள்ளை** (மிராசுதார்): "என்னைப்போல் சமூகத்தில் எத்தனை மிருகங்கள் இருக்கின்றனவோ? நான் வாழ்ந்தால் உலகமே பாழடைந்து விடும்! மக்கள் குலம் மகிமை இழந்து விடும்!! பெண்கள் குலம் பெருமை இழந்துவிடும்!!!"

**சரஸ்வதி** (மிராசுதாரின் மனைவி): "எப்போது பார்த்தாலும் வேலைக்காரியிடம் 'குசு, குசு' வென்று என்ன பேசுகிறீர்கள்?"

**சேகர்** (மிராசுதாரின் மகன்): "புஷ்பா! கள்ளி வயிற்றில் அகிலும், சிப்பி வயிற்றில் முத்தும் அகப்படுவதில்லையா? சேற்றில் தானே செந்தாமரை மலர்கிறது?"

**மோகனா** (சேகரின் அத்தை மகள்): "அத்தான்! என் உள்ளக் கோவிலில் உலாவும் உயிருள்ள தெய்வமல்லவா தாங்கள்!"

**கமலா** (வேலைக்காரி): "அன்று நான் வடித்த கண்ணீர்! இன்று என் மகள் வடிக்கும் கண்ணீர்! எங்களின் இரத்தக்கண்ணீர் உம்முடைய வாழ்வை அழிக்கும்!"

**புஷ்பா** (வேலைக்காரியின் மகள்): "என் வாழ்வைச் சிதைத்த அப்பாவி உலகில் இன்னும் வாழவேண்டுமென்றுதானே விரும்புகிறீர்கள்? பாவம்! தந்தையைக் காப்பாற்ற வேண்டியது தனயனின் கடமைதானே!

**பொன்னம்பலம்** (பெண் புரோக்கர்): "பொதிகை மலையை அசைத்தாலும் அசைக்கலாம்; ஆனால் இந்த பொன்னம்பலத்தை அசைக்க முடியுமா?"

**முத்து** (மைனர்): "புஷ்பா" எவ்வளவு அழகான பெயர்! அதை உச்சரிக்கும்போது நாவில் நீர் ஊறுகிறதே!

**மற்றும் வேலைக்காரன் முனிசாமி, வக்கீல், இன்ஸ்பெக்டர் முதலியோர்.**

# மிராசுதார்
## (நாடகம்)

**காட்சி : 1** **மிராசுதார் வீடு**

[மறுநாள் தமிழ்க்கலை விழா. மிராசுதார் சுந்தரம் பிள்ளை வீட்டில் ஒரு அறையில் அவருடைய தங்கை மகள் மோகனு வீணையை வைத்துப் பாடிக் கொண்டிருக்கிருள். பக்கத்தில் வேலைக்காரியின் மகள் புஷ்பா உட்கார்ந்திருக்கிருள்.]

**மோகனு:** [பாடுகிருள்].

"யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல்
இனிதாவ தெங்கும் காணும்
பாமரராய், விலங்குகளாய், உலகனைத்தும்
இகழ்ச்சி சொலப் பான்மை கெட்டு
நாமமது தமிழரெனக் கொண் டிங்கு
வாழ்ந்திடுதல் நன்ருே? சொல்லீர்!
தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
பரவும் வகை செய்தல் வேண்டும்."

(பாரதியார்)

[பாட்டின் இன்பத்தைப் பருகிக்கொண்டே சேகர் வருகிருன்].

**மோகனு:** அத்தான்! தாங்கள் வந்ததைக் கூடக் கவனிக்கவில்லை. நாளைக்குத் தமிழ் இசைப் போட்டியல்லவா? கொஞ்சம் பழகிப் பார்த்தேன். நான் எந்தப் பாட்டைப் பாட வேண்டும் என்று எனக்குத் தெரியவில்லை.

**சேகர்:** மோகனு! பாடுவதற்கா தமிழில் பாக்கள் கிடைக்கவில்லை! கடலைப்போல் பரந்தது நம் தமிழ்மொழி. கவிச் செல்வம் கவிந்திருப்பது நம் தாய் நாடு. கணக்கற்ற

கவிகள் தங்கள் பாதச் சுவடுகளைப் பதித்துச் சென்றிருப்பது நம் பாரத நாடு. தெவிட்டாத தேசியக் கீதங்கள் தான் எத்தனை? அவற்றில் ஒன்றைப் பாடு! புரட்சிக் கவிஞர் பாரதிதாசனின் பாடல்கள் எத்தனையோ இருக்கின்றன! அவைகளில் ஒன்றைப் பாடினால் நீ ,நிச்சயம் போட்டியில் வெற்றிபெறுவாய்! (மிராசுதார் வருகிறார்.)

**மிராசுதார்:** என்ன, மோகனா! நாளைக்குப் போட்டியில் முதல் பரிசு உனக்குத் தான்!

**மோகனா:** மாமா! எல்லாம் உங்கள் ஆசீர்வாதத்தால் கிடைக்கத்தான் செய்யும்!

**மிராசுதார்:** தைரியமாகப் பாட வேண்டும். உன் சாரீரம் அருமையாய் இருக்கிறது.

[மோகனாவும் புஷ்பாவும் போகிறார்கள்.]

**மிராசுதார்:** சேகர்! உன் வேலை விஷயமாகக் கடிதத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். எப்போது வருகிறதோ தெரியவில்லையே!

**சேகர்:** சீக்கிரம் வந்து விடும் என்று எண்ணுகிறேன், அப்பா!

[போகிறார்கள்]

(திரை)

## காட்சி: 2 தமிழ்க் கலை விழா மண்டபம்

[ஒரு மேடையில் மூன்று மத்தியஸ்தர்கள் உட்கார்ந்திருக்கிறார்கள். மோகனா மேடையில் உட்கார்ந்து புரட்சிக் கவிஞர் பாரதிதாசனின் பாடல் ஒன்றைப் பாடுகிறாள். தமிழின் பெருமையை யுணர்த்தும் அப்பாட்டைக் கேட்ட சபையோர்கள் கரகோஷம் செய்கின்றனர். போட்டி முடிவடைகிறது. இறுதியில் பரிசு வழங்கப்படுகிறது]

**கலைவிழாச் செயலாளர்:** சீமான்களே! சீமாட்டிகளே! தமிழ் அன்பர்களே! இன்று இவ் விழாவில் கலந்து கொண்ட யாவர்க்கும் எமது நன்றி. மத்தியஸ்தர்களின் தீர்ப்பின்படி தமிழ் இசைப் போட்டியில் மோகனா அம்மையார் முதல் பரிசு பெறுகிறார். (மோகனா மேடைக்குச் சென்று பரிசைப் பெறுகிறாள். கரகோஷம்).

முடிவாக இரண்டொரு வார்த்தைகள். நம் தாய் மொழி வளர்ச்சிக்கு யாவரும் உழைத்தல் வேண்டும். தெருவெலாம் தமிழ் முழக்கம் கேட்க வேண்டும். இலக்கணமும் இலக்கியமும் நன்கு கற்ற பல தமிழர்கள் எடெழுதல் வேண்டும். வேறு நாடுகளிலுள்ள அறிவுக் களஞ்சியங்களை அலசிப் பார்த்து அங்கு காணப்படும் சிறந்த கருத்துக்களையும், அறிவு பயக்கும் சிந்தனைப் பொறிகளையும் தமிழ் எடுகளாக எழுத வேண்டும்.

நமது புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் கூறுவதுபோல் தமிழுயர்ந்தால் தமிழ் நாடு உயரும். அறிவு உயரும். அறமும் ஓங்கும். ஆகவே தமிழ் வளர்ச்சிக்குப் பொருள் கொடுங்கள். கழகங்கள் நிறுவுங்கள். தமிழ்க் கல்லூரி, தமிழ் எடுகள் நிலைக்கும்படிச் செய்வது ஒவ்வொரு தமிழனுடைய புனிதக் கடமையாகும். (கைதட்டல்)

(திரை)

## காட்சி: 3 மிராசுதாரின் வீடு

[தமிழிசைப் போட்டியில் வெற்றி பெற்ற மோகனு புஷ்பா வுடன் இல்லம் வந்து சேருகிருள். அவளுக்குப் பின் சேகர் வருகிருன்.]

மோகனு: அத்தான்! மேடையில் ஏறும்போது எனக்குப் பயமாய் இருந்தது. வெட்கம் வேறே தொண்டையை அடைத்துக் கொண்டது. ஆனுல் ஒரு அடி பாடினதும் தைரியம் வந்து விட்டது.

சேகர்: மோகனு! கவிஞர் பாரதிதாசனின் பாடலை எவ்வளவோ அழகாகப் பாடிணுய்! "கரும்புதந்த தீஞ் சாறே" என்று அந்தப் பாடலை நீ ஆரம்பிக்கும்போது என் மயிர்க் கூச்சலிட்டது. சபையோர்கள் அப்படியே மெய் மறந்து போய்விட்டார்கள்! "அரும்பு தந்த வெண்ணகையே" என்று நீ பாடும்போது உனக்குக் கிடைத்த 'அப்ளாஸைக்' கேட்டாயா?

மோகனு: அத்தான்! என் பாட்டு சபையோர் எல்லோருக்கும் நன்ருய்க் கேட்டிருக்குமா?

சேகர்: பேஷாய்க் கேட்டிருக்கும்! அந்தப் பாடலில் கடைசி அடிகளை நீ பாடும்போது என்னை அறியாமலே கண்ணீர் வடித்து விட்டேன்.

மோகனு: உண்மையாகவா?

சேகர்: உண்மையாகவே தான்! அதை நீ அவ்வளவு அனுபவித்துப் பாடினுய்! என் பக்கத்தில் உட்கார்ந்திருந்த நம் ஊர் மைனர் முத்து, அவருடைய கண்ணீரை விசிறி மடிப்பு நேரியலால் துடைத்துக் கொண்டிருந்தார்.

மோகனு: பாவம், என் பாடலைக் கேட்டுக் கண்ணீர் விட்டாரா?

**சேகர்:** அது ஆனந்தக் கண்ணீர் மட்டும் அல்ல. தமிழன் தமிழின் இழி நிலையைக் கேட்டதும் உணர்ச்சி மிகுதியால் நெஞ்சு பொறுக்க முடியாமல் மனங்கசிந்து அழுத கண்ணீர்!

**மோகனு:** அத்தான்! நான் வெற்றி பெற்றது தங்களுக்குப் பெருமைதானே!

**சேகர்:** சந்தேகம் என்ன? உன் பாட்டின் மூலம் தமிழுக்கு அருந் தொண்டாற்ற வேண்டுமென்பதே என் பேரவா. மோகனு! கலைகளில் சிறந்தது இன்னிசைக் கலைதான். அதில் ஆர்வமில்லாதவன் மானிடன் அல்ல. மிருகத்தினும் தாழ்ந்தவன். கல் நெஞ்சையும் உருக்கும் சக்தி கானத்திற்கு உண்டு. கவலையைப் போக்கும் அரு மருந்தும் அதுதான்.

(உள்ளே போகிறுர்கள்.)

(திரை)

## காட்சி : 4 மிராசுதார் வீடு

[மிராசுதார், பண்ணை வரவு செலவுக் கணக்கு நோட்டுகளைப் புரட்டிக் கொண்டிருக்கிறார்.]

**மிராசுதார் :** கமலா !

[கமலா வருகிறாள்]

**கமலா :** என்ன வேண்டும் ?

**மிராசுதார் :** எனது கண்ணாடியை எடுத்துக்கொண்டு வா, கொஞ்சம் காப்பியும் கொண்டுவந்தால் நல்லது.

[கமலா உள்ளே போகிறாள். கண்ணாடியும் காப்பியும் கொண்டு வருகிறாள்].

**மிராசுதார் :** சேகர் எங்கே ?

**கமலா :** 'டென்னிஸ்' ஆடப் போயிருக்கிறார்.

**மிராசுதார் :** மோகன ?

**கமலா :** மோகனும் புஷ்பாவும் தோட்டத்தில் இருக்கிறார்கள்.

[சரஸ்வதி உள்ளே வருகிறாள்]

**மிராசுதார் :** சரி ! முனிசாமியை பசு மாட்டிற்குப் புல் போடச் சொல்.

[கமலா போகிறாள்]

இந்தக் கணக்கைப் பார்க்குமுன் மனிதனுடைய மூளை கோளாறு ஆகிவிடும் ! ஒன்றும் புரியவில்லை !

**சரஸ்வதி :** மிராசுதார்களுக்கெல்லாம் கணக்குப் புரியாததினால்தான் கணக்குப்பிள்ளை வைத்துக் கொள்ளுகிறார்கள் !

மிராசுதார்: நீ என்னை என்னமோ முட்டாள் என்று, நினைத்துக் கொண்டாய்! நான் பள்ளிக்கூடத்தில் படிக்கும் போது கணக்குப் பரீக்ஷையில் எப்போதும் முதல் மார்க் எனக்குத் தான்!

சரஸ்வதி: பள்ளிக் கணக்குப்புள்ளிக்கு உதவுமா?

மிராசுதார்: உதவாமல் என்ன?

சரஸ்வதி: நம் மோகனுவிற்குக் கொஞ்சம் நகை செய்ய வேண்டும், ஆசாரியிடம் சொல்லி அவளுக்கு வேண்டியதைச் செய்யச் சொல்லுங்கள்.

மிராசுதார்: அடே, அப்பா! இந்தப் பெண்களைப் படைத்த ஈஸ்வரன் தங்கத்தையும் படைத்தானே! சரி! உன் விருப்பம்போல் ஆகட்டும்.

[சரஸ்வதி போகிறாள். முனிசாமி வருகிறான்]

முனிசாமி: எசமான்!

மிராசுதார்: எசமானுக்கு என்னடா?

முனிசாமி: சாமீ! வீட்டிலெ......

மிராசுதார்: என்னடா காலையிலே வைகுண்ட அம்மானை பாடுகிறாய்!

முனிசாமி: குழந்தைக்குச் சுகமில்ல, சாமீ!

மிராசுதார்: என்றைக்குத் தான் அது சுகத்துடன் இருந்திருக்கிறது?

முனிசாமி: சன்னி மாதிரி இருக்கு, டாக்டரிடம் எடுத்துக்கிட்டு போணும்!

மிராசுதார்: அதற்கு நான் என்னடா செய்ய முடியும்? கழுதையைத் தூக்கிச் சாக்கடையில் போடுகிறதுதானே!

முனிசாமி: சாமீ! ஏழையைக் காப்பாற்றணும், கொஞ்சம் பணம்......

மிராசுதார்: பணமா? கொடுத்துவைத்தவன் மாதிரிப் பேசுகிறயே? பணத்திற்கு நான் எங்கே போவேன்?

முனிசாமி: எசமான் கிருபை செய்யணும், கோடி புண்ணியம் உண்டு.

மிராசுதார்: உனக்கு உதவி செய்துதானு நான் புண்ணியம் அடையவேண்டும்?

முனிசாமி: சாமீ! கொஞ்சம் தயவு புரியணும்.

மிராசுதார்: உங்களுக்குத் தயவு புரிந்தால் நான் உருப்பட்ட மாதிரிதான்!

முனிசாமி: சாமீ! உத்தரவு வரணும்!

மிராசுதார்: சனியன்! பிடித்த பிடியைத்தான் விட மாட்டானே! கணக்குப்பிள்ளையிடம் போய் இரண்டு ரூபாய் வாங்கிக்கொண்டு தொலைந்து போ.

[முனிசாமி போகிறன்]

நாய்கள்! பன்றி பல குட்டி போடுகிறமாதிரி பிள்ளைகளைப் பெற்றுவிட்டு அவைகளை வளர்க்க முடியாமல் பல்லைக் காட்டிக் கொண்டு அலைகிறர்கள்! இவர்கள் தொலைந்தால் தான் சமூகம் முன்னேற்றம் அடையும். ஏழைகளே இருக்கக் கூடாது என்று அரசாங்கம் ஒரு சட்டம் போட்டு விட்டால் எவ்வளவு நலமாய் இருக்கும்!

[பிச்சைக்காரன் தெரு வழியே பாடிக்கொண்டு போகிறன்]

எங்கே பார்த்தாலும் இந்தப் பயல்களுடைய தொந்தரவுதான்! பட்டணத்திற்குப் போயிருந்தேன். ரயில்வே ஸ்டேஷனைவிட்டு வெளியே வந்தால் பிச்சைக்காரர்கள்!

பஸ்ஸைவிட்டு இறங்கினுல் பிச்சைக்காரர்கள்! ஹோட்டலே விட்டு வெளியே காலே மிதித்தால் பிச்சைக்காரர்கள்!!! ஜனத் தொகையில் பாதிக்குமேல் பிச்சைக்காரர்கள் தான் என்று எண்ணுகிறேன்!

(திரை)

---

## காட்சி: 5 சேகரின் அறை

[சேகர் படித்துக் கொண்டிருக்கிருன். புஷ்பா ஒரு கோப்பையில் காப்பி கொண்டுவந்து சேகரிடம் கொடுக்கிருள்.]

சேகர்: புஷ்பா! அதோ அலமாரியில் இருக்கும் புத்தகங்களே நன்ருய்த் துடைத்து அடுக்கிவை.

[புஷ்பா புத்தகங்களே அடுக்கிக் கொண்டிருக்கிருள். சேகர் காப்பியைக் குடித்துக் கொண்டும் அவளேப் பார்த்துக் கொண்டும் இருக்கிருன்]

புஷ்பா: இந்தப் புத்தகத்தை எலி கடித்திருக்கிறது (ஒரு புத்தகத்தை எடுத்துக் காண்பிக்கிருள்)

சேகர்: அதை இங்கே கொண்டு வா.

[புஷ்பா அதைச் சேகரிடம் கொடுக்கிருள்]

பாவம்! எலி என்ன செய்யும்? இந்தப் பஞ்ச காலத்தில் அதற்கு உணவு வேண்டாமா?...... புஷ்பா நீ ஓய்ந்த நேரங்களில் ஏதாவது புத்தகங்கள் படிக்கிருயா?

புஷ்பா: படிக்கிறேன், நேற்றுத்தான் 'விக்கிரமாதித்தன் கதை'யைப் படித்து முடித்தேன்.

சேகர்: 'விக்கிரமாதித்தன் கதை' சோம்பேறிகள் படிக்கவேண்டிய புத்தகம். பழங் கதைகள் படிப்பதினுல் பயனில்லே, புஷ்பா!

[கமலா, "புஷ்பா! புஷ்பா!" என்று அழைக்கும் சத்தம் கேட்கிறது]

**புஷ்பா:** அம்மா! இதோ வந்துவிட்டேன்.

[புஷ்பா போகிறாள், சேகரன் அவளைப் பார்த்தபடி உட்கார்ந்திருக்கிறான்].

(திரை)

---

## காட்சி : 6 மிராசுதாரின் வீடு

[புரோக்கர் பொன்னம்பலம் மிராசுதார் அறைக்குள் நுழைகிறார்]

**மிராசுதார்:** என்ன, பொன்னம்பலம், அத்தி பூத்த மாதிரி?

**பொன்னம்பலம்:** சும்மா தங்களைப் பார்த்துவிட்டுப் போகலாம் என்று வந்தேன்.

**மிராசுதார்:** காரியம் ஏதாவது பெரிதாய் இருக்கும். இல்லாவிட்டால் இந்த நேரத்தில் இங்கு வருவாயா?

**பொன்னம்பலம்:** ஹ ஹ்ஹ!

**மிராசுதார்:** சௌக்கியந்தானே!

**பொன்னம்பலம்:** நல்ல சௌக்கியந்தான்!

**மிராசுதார்:** என்ன இவ்வளவு தூரம்?

**பொன்னம்பலம்:** தங்கள் பையனுக்கு நல்ல 'சான்ஸ்' கிடைத்திருக்கிறது. சென்னையிலிருந்து ஒரு பெண்ணின் தகப்பனார் ஐந்தாறு கடிதங்கள் போட்டு விட்டார்.

**மிராசுதார்:** அது யாரப்பா உன் வலையில் அகப்பட்டுக் கொண்டது?

பொன்னம்பலம்: பெரிய மீன்! நகை வியாபாரி நடராஜ பிள்ளை!

மிராசுதார்: அப்படியா?

பொன்னம்பலம்: அவருக்கு ஒரே பெண்! நன்றாய்ப் படித்திருக்கிறாள், பரதநாட்டியம் கூட ஆடத் தெரியும்!

மிராசுதார்: ஆனால் தற்காலத்துப் பெண்களுக்குச் சமையல் செய்ய மட்டும் தெரியாது!

பொன்னம்பலம்: ஹஹ்ஹ! பெண் தங்க விக்ரகம் மாதிரி இருக்கிறாள்! அடடா! அவள் மூக்கும் முழியும்—அசல் லக்ஷிமி மாதிரிதான்!

மிராசுதார்: எல்லாம் சரி! ரொக்கம் எவ்வளவு கிடைக்கும்?

பொன்னம்பலம்: நீங்கள் கூடவா வரதக்ஷணையை எதிர்பார்க்கிறீர்கள்! வரதக்ஷணை வாங்கக்கூடாது என்ற மனப்பான்மை மக்களிடம் உருவாகி வருகிற காலம் இது!

மிராசுதார்: நல்ல காலம்! பணத்தோடு பணம் சேர்ப்பதற்கு யார்தான் பிரியப்படமாட்டார்கள்?

பொன்னம்பலம்: மொத்தம் இருபதினாயிரம் ரூபாய் வாங்கி விடலாம்.

மிராசுதார்: பரவாயில்லை, நல்ல இடமாய்த்தான் இருக்கிறது. ஆனால்......

பொன்னம்பலம்: என்ன யோசிக்கிறீர்கள்?

மிராசுதார்: என் தங்கை மகள் மோகனா என் வீட்டில் தான் வளர்ந்து வருகிறாள். அவளைச் சேகருக்கு முடித்து விட வேண்டுமென்று என் வீட்டுக்காரி சதா சொல்லிக் கொண்டிருக்கிறாள்.

**பொன்னம்பலம்:** என்ன ஸார்! மோகனுவிற்கு நான் அருமையான மாப்பிள்ளை 'செலக்ட்' பண்ணிக்கொண்டு வருகிறேன். இவ்வளவு பெரிய தொகையை யார்தான் இழக்க விரும்புவார்கள்? வலிய வருகிற சீதேவியைக் காலால் உதைக்கலாமா?

**மிராசுதார்:** உண்மை! ஆனால் முதலில் சேகருடைய சம்மதத்தைப் பெற்றாகவேண்டும். பொன்னம்பலம்! தற்காலத்தில் படித்த பையன்களின் குணந்தான் தெரியுமே! பெண்ணைப் பார்த்த பின்தான் கல்யாணப் பேச்சு ஆரம்பிக்க வேண்டும் என்பார்கள், அல்லது 'லவ்' 'கிவ்' என்று சொல்லி அவர்கள் நினைத்த பெண்ணைத்தான் முடிக்க வேண்டு மென்று சத்தியாக்கிரகம் செய்வார்கள்!

**பொன்னம்பலம்:** வாஸ்தவம்! நேற்றுப் பத்திரிகையில் ஒரு விசித்திரமான விஷயத்தைப் பற்றிப் படித்தேன். அமெரிக்க வாலிபனொருவன் ஒரு பெண்ணை "போன்" வழியாகக் காதலித்தானும். பின்பு அவர்கள் இருவருக்கும் ஒரு கப்பலில் வைத்து விவாகம் நடந்ததாம்! முடிவில் அப்பெண் ஆகாய விமானத்தில் போகும்போது ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாளாம்! கட்டுக்கதை போலல்லவா இருக்கிறது?

**மிராசுதார்:** காலம் கெட்டுப் போச்சு! முளைத்து மூன்று இலை விடுவதற்குள் பையன்கள் உலக விஷயத்தில் ஆழமாக இறங்கி விடுகிறார்கள்! இதெல்லாம் சினிமாப் படங்களின் தீமைகள் என்றுதான் எண்ணுகிறேன். புற்றீசல் புறப்படுவதுபோல் மோசமான படங்கள் வெளிவந்து கொண்டிருக்கின்றன! காதல் கட்டங்கள் சேர்க்காவிட்டால் படம் படுத்துவிடும் என்று எண்ணுகிறார்கள் பட முதலாளிகள்!

பொன்னம்பலம்: சேகர் பெண்ணைப் பார்த்தபின் பேச்சு வார்த்தைகள் ஆரம்பிக்கலாம்.

மிராசுதார்: பெண்ணின் பெயர்?

பொன்னம்பலம்: கலைச்செல்வி.

மிராசுதார்: மிகவும் அழகான பெயர். எதுவரை படித்திருக்கிருள்?

பொன்னம்பலம்: பி. ஏ. படித்துக் கொண்டிருக்கிருளாம்!

மிராசுதார்: அப்படியானுல் சரியான ஜோடிதான்!

பொன்னம்பலம்: ஸார்! கல்யாண விஷயம் மட்டும் சந்தர்ப்பம் வாய்க்கும்போது 'டக்' என்று முடித்துவிட வேண்டும், காலதாமதம் செய்தால் மாப்பிள்ளைக்கோ அல்லது பெண்ணுக்கோ 'மார்க்கெட்'டில் விலை குறைந்து விடும்!

மிராசுதார்: ஆனுல் என் பையன் விஷயத்தில் அது அப்படியல்ல. சேகருடைய பெயரை "பார் அசோஸியேஷன்" நீதிபதி உத்தியோகத்திற்குச் சிபார்சு செய்திருக்கிறது. நீதிபதி வேலை கிடைக்குமென்று எதிர்பார்க்கிறேன்

பொன்னம்பலம்: மிகவும் சந்தோஷம்!

மிராசுதார்: பெண்ணின் தகப்பனுரைக் கொஞ்சம் பொறுத்துக்கொள்ளச் சொல். சேகரின் வேலை விஷயம் முடிந்தவுடன் மறுபடியும் பேச்சை ஆரம்பிக்கலாம்.

பொன்னம்பலம்: பேஷாய் ஆரம்பிக்கலாம்! போய் வரட்டுமா?

[போகிருர்]

(திரை)

## காட்சி : 7 மோகனா படிக்கும் அறை

[மோகனா படித்துக் கொண்டிருக்கிறாள். சேகர் 'டென்னிஸ்' மட்டையுடன் அங்கு வருகிறான்]

**மோகனா:** அத்தான், வாருங்கள்!

**சேகர்:** என்ன படித்துக் கொண்டிருக்கிறாய்' மோகனா?

**மோகனா:** மிகவும் அருமையாய் இருக்கிறது பாரதியாரின் குயில் பாட்டு.

**சேகர்:** அதில் என்ன அவ்வளவு விசேஷம்?

**மோகனா:** கேளுங்கள், அத்தான்! பெரிய வேடிக்கை. ஒரு சோலை, அதில் ஒரு பெட்டைக் குயில்!

**சேகர்:** அதன் பக்கத்தில் ஒரு ஆண் குயில் இருந்திருக்க வேண்டுமே!

**மோகனா:** போங்கள் அத்தான்!

**சேகர்:** சரி! 'கன்டினியூ'!

**மோகனா:** அந்தப் பெட்டைக் குயில்

காதல், காதல், காதல்
காதல் போயிற் காதல் போயிற்
சாதல், சாதல், சாதல்.

என்று பாடிக் கொண்டிருந்தது.

**சேகர்:** சனியன்! இந்தக் காதல் பைத்தியம் பறவைகளுக்குமா பிடித்து விட்டது?

**மோகனா:** முழுக்கதையும் கேளுங்கள். அப்படிப் பாடிக் கொண்டிருந்த குயில் ஒரு நாள் ஒரு குரங்கைக் காதலித்தது!

சேகர்: பேஷ்! மிகவும் பொருத்தமானது! குரங்குக்கும் குயிலுக்கும் காதல்! இனம் விட்டு இனமா?

மோகன: இந்தக் கதையை நானு சொல்லுகிறேன்? மகா கவி பாரதியாரே கூறுகிருர்.

சேகர்: சரி! அப்புறம் என்ன நடந்தது?

மோகன: அதன்பிறகு அக்குயிலை ஒரு மாடு காதலித்தது.

சேகர்: நல்ல கதை இது! இதைப் படித்துவிட்டுத் தான் தற்காலத்துப் பெண்கள் காடு மேடாகத் திரிகிருர்கள்!

மோகன: பெண்கள் மட்டும் என்ன? ஆடவர்கள் மட்டும் யோக்கியர்களோ?

சேகர்: நாம் இருவரும் சண்டையிட்டு என்ன பயன்? கதையைச் சொல்.

மோகன: இவ்வளவு தான்! குயில் பாட்டு எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. ஏனென்ருல் காதல் இன்றேல் சாதல் மேல்.

சேகர்: காதலாவது கருப்பஞ்சாருவது? காதல் எல்லாம் வெறுங் கட்டுக்கதை! கவியின் கண்மூடிக் கற்பனையில்தான்! வாழ்க்கையில் இல்லை. உலகத்தில் கிடையாது.

மோகன: அப்படியானல் நமது இலக்கியங்களில் தோன்றும் சீதை, இராமனைக் காதலிக்கவில்லையா? நளனும் தமயந்தியும் ஒருவரையொருவர் நினைத்து மனம் உருகினது பொய்யா? துஷ்யந்தன், சகுந்தலை கதையிலிருந்து என்ன விளங்குகிறது?

**சேகர் :** நீ பழங்கதைகளை நன்ருய்ப் படித்திருக்கிருய் என்பது விளங்குகிறது! மோகனு! உலகத்தில் காதல் திரைக்குப் பின் நடக்கும் கபட நாடகங்களும் பஞ்சமாபாதகங்களும் பல. காதல் வலையில் சிக்கிக் கற்பழிந்து கதறும் கன்னியர் அநேகர் உண்டு! காதல் வேட்டையில் கெட்டொழிந்த ஆடவர்தான் எத்தனை! காதல் கானல் நீர் போன்றது. தங்களின் காம இச்சைக்குக் காதல் முலாம் பூசி உலகத்தை ஏமாற்றப் பார்க்கிருர்கள் ஆடவரும் பெண்டிரும்!

**மோகனு :** அத்தான்! தாங்கள் முற்றுந் துறந்த முனிவர் போலல்லவா பேசுகிறீர்கள்?

**சேகர் :** இந்த உண்மையை அறிய ஒரு ஞானி வேண்டியதில்லை. தினந்தோறும் நம் கண் முன்ஞல் எத்தனையோ சம்பவங்களைப் பார்க்கிருேம். அவைகளைப் பற்றிக் கேள்விப் படவும் செய்கிருேம்!

**மோகனு :** அப்படியாஞல் உண்மைக் காதல் கிடையாதா?

**சேகர் :** நூற்றுக்கு ஒன்றுதான் உண்மைக் காதல் என்று சொல்லலாம். அதுவுங்கூட கீழான நோக்கம் கலவாமல் இருத்தல் துர்லபம்.

[போகிருன்]

(திரை)

## காட்சி : 8 தெரு

[மைனர் முத்து புரோக்கர் பொன்னம்பலத்தைச் சந்திக்கிருர்]

மைனர் முத்து : வாருங்கள், மிஸ்டர் பொன்னம்பலம்! தங்களைப் பார்க்க வேண்டுமென்று இரண்டு நாட்களாக எங்கேயெல்லாமோ வலை வீசிப் பார்த்தேன், வெற்றி கிட்டவில்லை. இப்போது கும்பிடப்போன தெய்வம் குறுக்கிட்ட மாதிரி வந்துவிட்டீர்கள்!

பொன்னம்பலம் : என்ன மைனர்வாள்! என்னை "வா" என்று சொல்லியிருந்தால் தங்களிடம் ஓடி வந்திருக்க மாட்டேனு? ஊரில் இல்லை. அதனுல்தான்......

மைனர் முத்து : அப்படிச் சொல்லுங்கள்! அது தானே கண்ணில் அகப்படவில்லை.

பொன்னம்பலம் : மனிதனுக்கு மூச்சுவிட நேரங் கிடையாது. பெண் வேண்டுமென்றும், மாப்பிள்ளை வேண்டு மென்றும் எப்போது பார்த்தாலும் என்னை மொய்த்து விடுகிருர்கள். பெரிய நியூஸன்ஸ்!

மைனர் முத்து : இருக்கத்தானே செய்யும்! நம் நாட்டின் ஜனத்தொகை பெருக வேண்டாமா?...... ஆனுல் தாங்கள் செய்யும் சேவை மகத்தானது!

பொன்னம்பலம் : அப்படி நான் என்ன செய்து விடுகிறேன்?

மைனர் முத்து : யானைக்குத் தன் பலம் தெரியவா போகிறது? வருஷக் கணக்கில் வீட்டைவிட்டுக் கிளம்பாத வனிதைகளுக்கு வரன் கண்டுபிடித்து விடுகிறீர்கள்! இது கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டு பிடித்ததைவிடப் பிரம்மாதமான காரியமல்லவா? தங்களுடைய பேருதவி

யில்லாவிட்டால் நொண்டி வேலனுக்கு அவ்வளவு அழகான பெண் கிடைத்திருப்பாளா?

பொன்னம்பலம்: எல்லாம் அவன் செயல்! நம்மால் என்ன செய்ய முடியும்?...... சரி! என்ன விஷயமாய் என்னைத் தேடினீர்கள்?

மைனர் முத்து: சிறு விஷயந்தான்! ஆனால்......

பொன்னம்பலம்: விஷயமில்லாமல் இந்தப் புரோக்கர் பொன்னம்பலத்தைத் தேடுவீர்களா? ஏதாவது மிகவும் சிக்கலான விஷயமோ?

மைனர் முத்து: கொஞ்சம் சிக்கல்தான்! பெண்ணை நான் தேர்ந்தெடுத்து விட்டேன்.

பொன்னம்பலம்: மிகவும் நல்லது!

மைனர் முத்து: ஆனால் அந்த எட்டாத கொம்பில் இருக்கும் கனியைக் கொய்திட தாங்கள்தான் வழி கண்டு பிடிக்க வேண்டும்.

பொன்னம்பலம்: எல்லாம் அவன் செயல்! வழி கிடையாமலா போய்விடும்?

மைனர் முத்து: அதற்காகத்தானே தங்களிடம் வந்தேன்!

பொன்னம்பலம்: தங்கள் கண்களின் பார்வைக்கு இலக்கான அக் கட்டழகி யாரோ?

மைனர் முத்து: சில நாட்களுக்கு முன் நம் ஊரில் "தமிழ் விழா" நடந்ததல்லவா?

பொன்னம்பலம்: ஆம்! நடந்தது!

மைனர் முத்து: அதில் சங்கீதப் போட்டியில் வெற்றி பெற்ற பெண் யார் என்று தெரியுமல்லவா?

பொன்னம்பலம்: என்ன, மைனர்வாள்! மிராசுதார் சுந்தரம் பிள்ளை அவர்களின் தங்கை மகள் மோகனாவைத் தெரியாதவர்கள் யார் இருப்பார்கள்? நல்ல அழகு! அழகிற் கேற்ற குணம்!

மைனர் முத்து: மோகனாவுடன் மற்றொரு பெண்ணை யும் பார்த்தேன்.

பொன்னம்பலம்: ஓஹோ! அவளைச் சொல்லுகிறீர் களா? என்ன மைனர்வாள்! இருந்திருந்து ஒரு தோழிப் பெண்மீதா தங்களுடைய திருக் கண்ணோட்டத்தைச் செலுத்திவிட்டீர்கள்?

மைனர் முத்து: 'காதலுக்குக் கண் இல்லை' என்பார்கள். அவளை எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. அவள் பெயர்?

பொன்னம்பலம்: புஷ்பா!

மைனர் முத்து: புஷ்பா! எவ்வளவு அழகான பெயர்! அதை உச்சரிக்கும்போது நாவில் நீர் ஊறுகிறதே!

பொன்னம்பலம்: போங்கள்! போங்கள்! உங்கள் குலமென்ன, கோத்திரமென்ன? பணமென்ன, பவிசென்ன? அறிவென்ன, ஆற்றல் என்ன? கேவலம், பணிப் பெண்ணாய் இருக்கும் அவள் மீது ஆசையா? நீங்கள் நினைத்தால் ரதியைக்கூட மனைவியாக்கிக் கொள்ளலாமே?

மைனர் முத்து: கொள்ளலாம்! ஆனால் இப்போது மன்மத பாணமல்லவா என் மார்பைத் துளைக்கிறது! இன்னுங் கொஞ்சநாள் தாமதித்தால் எனக்குப் பைத்தியம் பிடித்துவிடும் போலிருக்கிறது! எப்படியாவது புஷ்பாவை என் மனைவியாக்கி வைத்தால் எவ்வளவு பணம் வேண்டு மானாலும் தருகிறேன்.

பொன்னம்பலம்: இது ஒரு பெரிய வேலையா? எவ்வளவு சிக்கலான காரியமாயிருந்தாலும் அதைத் துண்டு துண்டாக "பிரேக்" பண்ணி "சக்ஸஸ்புல்" ஆக்கிவிடுவேன். அதனால்தானே எனக்குப் "புரோக்கர்" பொன்னம்பலம் என்று பெயர்!

மைனர் முத்து: "தாங்ஸ்"

பொன்னம்பலம்: தங்களுக்கு என்னால் இயன்ற உதவி நிச்சயம் செய்யத் தவற மாட்டேன். தங்களின் நட்பிருந்தால் போதும்! பெரியவர்கள் சிநேகம் வீண் போகாது.

மைனர் முத்து: (கொஞ்சம் பணத்தை எடுத்து) இதோ செலவிற்குக் கொஞ்சம் பணம் வைத்துக் கொள்ளுங்கள்.

பொன்னம்பலம்: வேண்டாம்! வேண்டாம்! பணத்திற்கு இப்போது என்ன அவசரம்? பின்னால் பார்த்துக் கொள்ளலாம். தங்கள் பணமும் என் பணமும் ஒன்று தானே!

மைனர் முத்து: இல்லை! வைத்துக்கொள்ளுங்கள். (பொன்னம்பலம் பணத்தைப் பெற்றுக்கொள்ளுகிறார்)

மைனர் முத்து: நான் வரட்டுமா? மறுமுறை நாம் சந்திக்கும்போது காரியம் பழமாய் இருக்கவேண்டும்!

பொன்னம்பலம்: எல்லாம் அவன் செயல்! இந்தப் பொன்னம்பலம் கையில் காயும் கனியாகிவிடும்!

[மைனர் முத்து போகிறார்]

இப்படியும் மனிதர்கள் உலகத்தில் இருக்கத்தானே செய்கிறார்கள்! இவன் இருக்கிற அழகிற்கு புஷ்பா வேண்டுமாம்! பணத் திமிர் பிடித்து அலைகிறான் பயல்!

அவன் பணத்தை நன்ருகக் கறந்துவிட வேண்டியதுதான்! முட்டாள்! எட்டாத பழத்திற்குக் கொட்டாவி விடுகிருன்!

[போகிருர்]

(திரை)

---

## காட்சி : 9 மிராசுதார் வீடு

[மிராசுதாரும் கமலாவும் மெதுவான குரலில் பேசிக் கொண்டிருக்கிருர்கள். மிராசுதாரின் மனைவி சரஸ்வதி அங்கு வருகிருள், கமலா அவ்வறையை விட்டு நழுவி விடுகிருள். சரஸ்வதி அவளை முறைத்துப் பார்க்கிருள்].

**மிராசுதார்:** சேகர் எங்கே?

**சரஸ்வதி:** வெளியே உலாவப் போயிருக்கிருன்...... அது இருக்கட்டும், புரோக்கர் பொன்னம்பலம் பிள்ளை அடிக்கடி நம் வீட்டிற்கு வருவது எனக்குப் பிடிக்கவில்லை.

**மிராசுதார்:** அவர் தங்கமான மனிதர்! நானும் அவரும் பள்ளித்தோழர்கள், என் மேல் அவருக்கு மிகவும் பிரியம், அதனுல்தான்......

**சரஸ்வதி:** அவர் இங்கு வருவதும் போவதும் சரிப் படாது, பெண் தரகனுக்கு நம் வீட்டில் என்ன வேலை?

**மிராசுதார்:** பெண் இருந்தால் மாப்பிள்ளை வீட்டுக் காரர்கள் வருவார்கள், மாப்பிள்ளை இருந்தால் பெண் வீட்டுக்காரர்கள் வரத்தானே செய்வார்கள்!

**சரஸ்வதி:** நம் வீட்டிற்கு ஒருவரும் வரவேண்டாம். பெண்ணும் மாப்பிள்ளையும் நம் வீட்டில் இருக்கும் போது......!

**மிராசுதார்:** இல்லை! சென்னையில் பெரிய நகை வியாபாரியாம் அவருக்கு ஒரே பெண் குழந்தைதானும்! பெண் மிகவும் அழகுள்ளவளாம்... அவளைச் சேக.....ருக்கு ...முடித்து விடலாம் என்று பொன்னம்பலம் சொல்லுகிருன்.

**சரஸ்வதி:** சொல்லுவான், சுரைக்காய்க்கு உப்பில்லை என்று! நம் வீட்டில் வளர்கிருள் கிளி மாதிரி மோகன! சேகர்தான் மோகனவுக்குக் கணவன். மோகனதான் சேகருக்கு மனைவி!

**மிராசுதார்:** நீ இப்படிச் சொல்லுவாய் என்று நான் முன்னமே நினைத்தேன்.

**சரஸ்வதி:** இதில் நினைப்பதற்கு என்னவிருக்கிறது? சேகரும் மோகனவும் சிறு குழந்தைகளாக இருக்கும் போதே இதைப்பற்றி முடிவு செய்தாகி விட்டது!

**மிராசுதார்:** முடிவா? 'பிராமிஸரி நோட்' எழுதிக் கொடுத்திருக்கிருயோ?

**சரஸ்வதி:** அப்படித்தான்! மோகன தங்கள் தங்கை மகள் தானே! அவள் இறந்து போகும்போது நான் கொடுத்த வாக்கை ஒரு போதும் மீறமாட்டேன், அவளும் இதைத்தானே சொல்லிவிட்டுப் போனுள்.

**மிராசுதார்:** நன்ருய்ச் சொன்னுள்! சாகும்போது ஏதோ உளறினுளாம்! அதை நிறைவேற்றப் போகிருளாம்! நாம் அரிச்சந்திரன் மாதிரி இருக்க முடியுமா?

**சரஸ்வதி:** மோகனவைத் தவிர வேறு யாரையும் சேகர் மணஞ்செய்ய விடமாட்டேன். அப்படிச் செய்தால் பழி வந்து நேரும்...... எங்கேயோ உள்ள குரங்கைப் பிடித்து மருமகள் என்று என் தலையில் கட்டப் பார்க்கிறீர்கள்! நன்ருய் இருக்கிறது வேடிக்கை!

மிராசுதார்: நீ ஏன் இப்படி வறட்டுத் தவளை மாதிரி கத்துகிறாய்? இந்த விவாகத்திற்குச் சேகர் சம்மதிக்க வேண்டாமா? அவன் படித்த பையன்......

சரஸ்வதி: நான் வரைந்த கோட்டுக்கு அவன் வெளியே போகமாட்டான்.

மிராசுதார்: அவன் சம்மதித்தால் சரிதான்!

[சேகர் வருகிறான்]

சரஸ்வதி: சேகர்! உன் அப்பா சொல்லுகிற நியாயத்தைக் கேளு.

சேகர்: அப்பா, என்ன விசேஷம்?

மிராசுதார்: உன் விவாக விஷயமாய்ப் பேசிக் கொண்டிருந்தோம்.

சரஸ்வதி; நீ மோகனாவைத்தான் கட்டிக்கொள்ள வேண்டுமென்று நான் சொல்லுகிறேன்.

சேகர்: அதற்கு அப்பா என்ன சொல்லுகிறார்கள்?

சரஸ்வதி: எங்கேயோ உள்ள கோட்டானைப் பிடித்து உன் கழுத்தில் கட்டப்பார்க்கிறார்!

சேகர்: இதைப்பற்றி நீங்கள் ஏன் சண்டை போடு கிறீர்கள்? எனது விவாக விஷயத்தை மெதுவாகப் பார்த்துக்கொள்ளலாமே? ஆனால் நான் மோகனாவை......

சரஸ்வதி: (ஆத்திரத்துடன்) என்ன, நீ மோகனாவை விவாகம் செய்ய முடியாது என்று கூறுகிறாய்?

சேகர்: அம்மா! தாங்கள் கூறுவதில் கொஞ்சமேனும் அர்த்தம் இருக்கிறதா? நானும் மோகனாவும் அண்ணனும் தங்கையும்போல் பழகி வந்திருக்கிறோம். மோகனாவுக்கு என்னைவிட நல்ல மாப்பிள்ளை கிடைக்கத்தான் செய்யும்!

**சரஸ்வதி :** அடே! நீ கூடவா இப்படிச் சொல்லு கிருய்? (கண் கலங்கி) சேகர்! நான் கட்டின மனக் கோட்டைகளை நொறுக்கி விடாதே, மோகனு உன் அத்தை மகள். நான் கொடுத்த வாக்கை நிறைவேற்றி வைப்பது உன் கடமை.

**சேகர் :** நீங்கள் கொடுத்த வாக்கை நிறைவேற்று வதில் நான் குறுக்கே நிற்கவில்லை. ஆனால் மோகனு எனக்குப் பிடிக்கவில்லை.

**சரஸ்வதி :** பிடிக்கவில்லை! மோகனுவிடம் என்ன குறையைக் கண்டாய்? அவளைவிட அழகான பெண்கள் நம் ஊரில் யார் இருக்கிருர்கள்?

**சேகர் :** அம்மா! எல்லாம் பார்த்துக் கொள்ளலாம். இப்போது ஏன் மண்டையை உடைத்துக் கொள்ளு கிறீர்கள்?

சரஸ்வதி : மோகனு, பிடிக்கவில்லையோ? அதை நான் பார்க்கத்தான் போகிறேன்! இந்தச் சரஸ்வதியின் உடலில் உயிர் இருக்கும்வரை நான் வேறு யாரையும் கல்யாணம் செய்ய விடமாட்டேன்!

[கோபத்துடன் போகிருள்]

**மிராசுதார் :** பார், உன் அம்மாவின் கோபத்தை!

**சேகர் :** பாவம் அவர்கள் வேறு என்ன செய்ய முடியும்?

(திரை)

## காட்சி : 10 தோட்டம்

[சேகர் பெஞ்சின்மீது உட்கார்ந்து கொண்டு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருக்கிறன். மோகனு வருகிருள்].

**மோகனு :** 'குட் ஈவினிங் மி லாட்'!

**சேகர் :** என்ன, மோகனு ! கிண்டல் செய்கிருயா ?

**மோகனு :** கிண்டலுமில்லே, சுண்டலுமில்லே ! தாங்கள் சிக்கிரத்தில் நீதிபதியாகி விடுவீர்கள். அப்பொழுது கோர்ட்டில் வக்கீல்கள் தங்களேப் பார்த்து 'மி லாட்' என்று தானே கூறுவார்கள் ?

[அவனுடைய தாடையைப் பிடித்து இழுக்கிருள்]

**சேகர் :** மோகனு ! நீ பெரிய நியூஸன்ஸ் ! நான் போய் விடுகிறேன். (எழுந்திருக்கிருன்)

**மோகனு :** என்ன அத்தான் ! (அவனுடைய கரங்களேப் பிடித்துக் கொள்கிருள்) தங்களேப் போல் ஆடவர்களேப் பார்த்தது கிடையாது.

**சேகர் :** உன்னேப் போல் பெண்ணேயும் நான் பார்த்த தில்லே.

**மோகனு :** தங்களிடம் நான் பேசமுடியுமா ? நீதிபதியிடம் எவ்வளவோ படித்த வக்கீல்களே திணறிப் போய் விடுகிருர்களே !

**சேகர் :** மோகனு ! தயவுசெய்து வீட்டிற்குள் போ. என்னேத் தொந்தரவு செய்யாதே.

**மோகனு :** அத்தான் ? நான் தங்களே மனப் பூர்வமாகக் காதலிக்கிறேன். என்னே நிராகரித்து விடாதீர்கள் !

**சேகர் :** மோகனு ! இன்னும் நீ சிறு பிள்ளேயாகவே இருக்கிருய். இந்த விளேயாட்டுப் பேச்சை விட்டுவிடு.

மோகனு: என்ன, அத்தான்!

சேகர்: என்னை விட்டுவிடு. நான் போகிறேன்.

மோகனு: அத்தான்! தாங்கள் ஒரு விசித்திர மனிதர். எங்கேயாவது புறுவிற்குப் பயந்து பருந்து ஓடுமா? அல்லது கலைமானைப் பார்த்துக் கடுவாய் கலங்குமா?

சேகர்: சூழ்நிலை சரியாய் இல்லாவிட்டால் ஓடவும் செய்யும்; கலங்கவும் நேரிடும்!

மோகனு: நீங்கள் எனக்கு 'பிராமிஸ்' செய்து கொடுத்தால்தான் தங்களை நான் விடுவேன்.

சேகர்: இதென்ன உபத்திரவமாய் இருக்கிறது! மோகனு! (சிரித்துக்கொண்டு) இப்போது என்ன அவசரம்? உன் அத்தான் உன்னை விட்டு ஓடியா போய்விடுவான்?

மோகனு: அப்படிச் சொல்லுங்கள்! அப்பா! இப்போதுதான் என் மனம் நிம்மதியடைந்தது. போய் வருகிறேன், 'மி லாட்',

[போகிருள். சேகர் அவளைப் பார்த்தபடி நிற்கிருன்]

(திரை)

## காட்சி: 11 மிராசுதாரின் அறை

[மிராசுதார் படித்துக் கொண்டிருக்கிறார். கமலா அங்கு வருகிறாள். மிராசுதார் சுறுசுறுப்பாய் இருப்பதைப் பார்த்த கமலா ஒன்றும் பேசாது திரும்புகிறாள்]

மிராசுதார்: கமலா!

(கமலா திரும்பி வருகிறாள்)

கமலா: என்ன?

மிராசுதார்: என்ன வேண்டும்?

கமலா: ஒன்றுமில்லை சும்மா வந்தேன்.

மிராசுதார்: ஏதோ சொல்ல வந்தவள்போல் காணப் பட்டாயே! அதுதான் கேட்டேன்.

கமலா: எல்லாம் புஷ்பா விஷயமாகத்தான்.

மிராசுதார்: அட, அசடே! அவளைப் பற்றி எனக் கில்லாத கவலையா உனக்கு?

கமலா: எல்லாம் இனிமையாகப் பேசி விடுவீர்கள். காரியத்தில் ஒன்றுமிராது.

மிராசுதார்: கமலா! என்னை அப்படி நினைக்காதே. நான் சொன்ன சொல் தவறமாட்டேன்.

கமலா: என் இனத்துப் பையன் ஒருவன் இருக் கிறான். அவனுக்குப் புஷ்பாவை முடித்து விடலாம் என்று எண்ணுகிறேன்.

மிராசுதார்: அவனுக்கு என்ன வேலை?

கமலா: எங்கேயோ டில்லியில் பட்டாளத்தில் இருக் கிறானும்.

**மிராசுதார் :** கமலா! இதற்கு ஒரு நாளும் நான் சம்மதிக்க மாட்டேன். யாராவது கிளியை வளர்த்துப் பூனை கையில் கொடுப்பார்களா?

**கமலா :** ஆனால் கூண்டில் அடைபட்டு அவதிப்பட விட்டுவிட வேண்டாம்.

**மிராசுதார் :** கமலா! வீணாக மனதைப் புண்படுத்திக் கொள்ளாதே. புஷ்பாவை என் சொந்த மகளைப் போல் நேசிக்கிறேன்...... உண்மையும் அதுதானே, கமலா! அவள் என் ரத்தத்தின் ரத்தம் அல்லவா? கமலா! பதினாறு வருடங்களுக்கு முன் அன்று நடந்த சம்பவத்தை நினைத்துப் பார்...... நீ என்னிடம் அடைக்கலம் புகுந்தாய்; நான் உன்னைக் காப்பாற்றுவதாக வாக்களித்தேன். நீ என்னை நம்பினாய். அப்போது நான் உன்னை மோசம் செய்ய நினைக்க வில்லை. ஆயினும் என் பருவத்தின் விளைவால் நான் தவறி விட்டேன்...... என் தவறின் அடையாளமாகப் பிறந்தவளல்லவா புஷ்பா! புஷ்பா இவ்விஷயத்தை அறிந்தால் உன்னையும் என்னையும் வெறுக்கத்தானே செய்வாள்! கமலா! ஏன் மௌனம் சாதிக்கிறாய்?

*(அவளுடைய கரத்தைப் பிடிக்க முயற்சிக்கிறார் மிராசுதார். கமலா அப்பால் செல்லுகிறாள்)*

**கமலா :** இனிமேலும் நாம் தவறக்கூடாது. நமது கள்ள நட்பின் சின்னமாக விளங்கும் புஷ்பாவைச் சீக்கிரம் கடத்தி விடத் தாங்கள் முயற்சித்தால் கோடிப் புண்ணியம் உண்டு.

*[சரஸ்வதி அங்கு வருகிறாள். கமலா நழுவி விடுகிறாள்]*

**சரஸ்வதி :** கமலா என்னமோ 'புண்ணியம் உண்டு' என்று சொன்னாளே! அது என்ன?

மிராசுதார்: காசி, ராமேஸ்வரம் சென்றால் புண்ணியம் உண்டு என்று சொல்லிக் கொண்டிருந்தாள். சிறு குழந்தையாய் இருக்கும்போது அவள் ராமேஸ்வரம் போயிருக்கிறாளாம்.

சரஸ்வதி: மோகனாவுக்கும் சேகருக்கும் கல்யாணம் முடிந்தவுடன் நாமும் அங்கு போய்வரத்தான் வேண்டும். நான் ஒரு நேர்ச்சை செய்திருக்கிறேன்.

மிராசுதார்: அப்படியா? நீ ஒரு பழங்காலத்துப் பைத்தியம்.

(திரை)

---

## காட்சி: 12 தோட்டம்

[புஷ்பா தோட்டத்தில் முல்லை மலர்களைப் பறித்துக் கொண்டிருக்கிறாள். சேகர் பின் பக்கமாக வருகிறான். காலடிச் சத்தம் கேட்டு புஷ்பா திரும்பிப் பார்க்கிறாள். நாணத்தால் தலை குனிகின்றாள்.]

சேகர்: புஷ்பா! தனிமையாக இங்கு என்ன செய்து கொண்டிருக்கிறாய்?

புஷ்பா: பூப்பறிக்க வந்தேன்.

சேகர்: பூ யாருக்கு?

புஷ்பா: மோகனா அக்காவுக்கு!

சேகர்: உனக்கு வேண்டாமா?

புஷ்பா: இரண்டு பேருக்குந்தான்.

[சேகர் பக்கத்தில் நெருங்குகிறான். புஷ்பா ஒரு அடி பின் செல்கிறாள்.]

சேகர்: புஷ்பா!

புஷ்பா: நான் போகவேண்டும். வழி விடுங்கள்.

சேகர்: புஷ்பா! மலர் பறித்து விட்டாயா?

புஷ்பா: பறித்து விட்டேன்.

சேகர்: இவ்வளவு பூக்கள் போதுமா?

புஷ்பா: இன்றைக்கு இவ்வளவு போதும்.

சேகர்: பொய் சொல்லாதே! நான் வந்ததினால் தானே நழுவிவிடப் பார்க்கிறாய்?

புஷ்பா: (மௌனம்)

சேகர்: புஷ்பா!

புஷ்பா: நாம் இருவரும் இங்கே நிற்பதை வீட்டில் யாராவது பார்த்தால்......

சேகர்: பொறுமைப்படுவார்கள்! அவ்வளவுதானே?

புஷ்பா: இல்லை! வீண் தொந்தரவு ஏற்படும்.

(சேகர் அவள் வைத்திருந்த மலர்களில் ஒன்றை எடுக்கிறான்)

சேகர்: புஷ்பா! இன்றுதான் என் மனதிலுள்ள ஆசையை உன்னிடம் சொல்ல நல்ல சமயம் வாய்த்தது. புஷ்பா! என் இருதயத்தில் நீ எப்படியோ இடம் பெற்று விட்டாய். சிறு வயதிலிருந்தே உன் மீது நான் கொண்டிருந்த நட்பு இன்று என்னைப் படாத பாடு படுத்து கின்றது.

புஷ்பா: இவ்விஷயம் அப்பாவுக்கும் அம்மாவுக்கும் தெரிந்தால் பொல்லாப்பு நேரிடும்.

சேகர்: அதைப்பற்றி நீ ஏன் கவலைப் படுகிறாய்? நான் பார்த்துக் கொள்ளுகிறேன்.

**புஷ்பா:** சேகர்! தாங்கள் நல்ல அறிவாளி நன்ருய் யோசித்துப் பாருங்கள்.

**சேகர்:** யோசித்த பின்தான் இம்முடிவிற்கு வந்திருக்கிறேன்.

**புஷ்பா:** தங்கள் கௌரவத்திற்கும், உயர்ந்த குடும்பத்திற்கும் நான் தகுதியற்றவள்.

**சேகர்:** நீ அப்படி நினைக்கிருய். ஆனுல் நான் அப்படி நினைத்தால்தானே!

**புஷ்பா:** என்னைவிட எத்தனையோ......

**சேகர்:** பெண்கள் என்னை மணஞ்செய்யத் தயாராய் இருப்பார்கள் என்றுதானே சொல்லுகிருய். ஆனுல் நான் விரும்புவது ஒரே ஒரு பெண்ணைத்தான்.

**புஷ்பா:** அவள் மோகனுவாகத்தான் இருக்க வேண்டுமென்று தங்களுடைய பெற்ருேர்கள் விரும்புவார்கள்.

**சேகர்:** பெற்ருேர்கள் இவ்விஷயத்தில் என்னைக் கட்டுப்படுத்த முடியாது. மண விஷயம் என் மனம்போல் செய்ய வேண்டிய விஷயம்.

**புஷ்பா:** அவர்கள் விருப்பப்படி நடந்தால்தான் அவர்கள் மகிழ்ச்சியடைவார்கள். குடும்பத்தில் சமாதானம் நிலவும். சேகர்! வீண் தொந்தரவு எதற்கு?

**சேகர்:** புஷ்பா! பெற்ருேர்கள் ஒரு மரக் கட்டையையோ, மண்ணுங்கட்டியையோ தம் பிள்ளைகளுக்குப் பெண்ணுகப் பார்த்து அவர்கள் தலையில் கட்டும் காலம் இதுவல்ல.

**புஷ்பா:** நான் தங்கள் குடும்பத்திற்குத் தகுதியற்றவள் என்றே எண்ணுகிறேன்.

சேகர்: உன் அம்மா எங்கள் வீட்டில் பணிப் பெண்ணாக இருப்பதால் நீ என் விருப்பத்திற்கு இசையப் பயப்படுகிறாயோ? அல்லது பணிப்பெண்ணின் மகளைப் படித்த சேகர் விவாகம் செய்தான் என்று உலகம் என்னை ஏளனம் செய்யக் கூடாது என்று எண்ணுகிறாயா?

புஷ்பா: அது உண்மைதானே!

சேகர்: புஷ்பா! நீ நினைப்பது பெருந் தவறு. கள்ளி வயிற்றில் அகிலும், சிப்பி வயிற்றில் முத்தும் அகப்படுவதில்லையா? சேற்றில்தானே செந்தாமரை மலர்கிறது! புஷ்பா! உன்னை என் உள்ளன்போடு காதலிக்கிறேன். (அவளுடைய கரத்தைச் சேகர் பிடிக்கிறான். அச்சமயம் 'புஷ்பா! புஷ்பா!' என்று மோகனா அழைக்கும் சத்தம் கேட்கிறது)

புஷ்பா: தயவு செய்து விட்டு விடுங்கள்.

(சேகர் போய் விடுகிறான், மோகனா வருகிறாள்)

மோகனா: என்ன, புஷ்பா! இவ்வளவு நேரம்?

புஷ்பா: அக்கா! இன்றைக்கு அவ்வளவு பூக்கள் இல்லை. செடியில் அங்குமிங்கும் தேடிப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

மோகனா: பூ இல்லாவிட்டால் பரவாயில்லை. கோவிலுக்குப் போகலாம், வா.

(போகிறார்கள்)

(திரை)

## காட்சி : 13 மைனர் முத்துவின் வீடு

[நிலைக்கண்ணாடியின் முன் மைனர் முத்து நின்று கொண்டிருக்கிறார்]

மைனர் முத்து : [தனி மொழி]...... புஷ்......பா! புஷ்பா!...... எவ்வளவு அழகான பெயர்! பெயருக்கேற்ற ஆள்! மெல்லிய அல்லி மலரைப் போலல்லவா அன்று அவள் காட்சியளித்தாள்......!

புஷ்பா! உன் முக அழகு செந்தாமரைக்கு ஏது? உன் பற்களின் தோற்றம் முல்லை மொக்குகளைத் தோற்கடித்துவிடும்! உன் கண்களின் கருமை வண்டுக்கேது?... புஷ்பா!... உன் காதலால் உருக்கிய வெண்ணெய் போலாகி விட்டது என் உள்ளம்! என் இருதயத் துடிப்புகளை நீ கேட்கமுடியுமா? என் பெரு மூச்சுக்கள் உன்னை எட்டுமானால்......நிச்சயமாக நீ என்னை உன் கருணைக் கண்களால் பார்க்கத்தான் செய்வாய்!

[அறையின் கதவு தட்டப்படும் சத்தம், மைனர் கதவைத் திறக்கிறார். ஜோஸ்யர் சிரித்துக்கொண்டு உள்ளே வருகிறார்]

மைனர் முத்து : வாருங்கள்! வாருங்கள்! ஜோஸ்யர் வாள்! உங்களைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். இப்போதுதான் வருகிறீர்களோ?

ஜோஸ்யர் : இல்லை. கொஞ்ச நேரத்திற்கு முன் வந்து விட்டேன். தாங்கள் யாருடனோ பேசிக் கொண்டிருந்தீர்கள்......

மைனர் முத்து : ஒருவருமில்லை ஒரு நாடகத்தில் நடிக்கப் போகிறேன். அதற்கு ஒத்திகை பார்த்துக் கொண்டிருந்தேன்.

ஜோஸ்யர் : தங்கள் ஜாதகத்தைப் பார்த்துவிடலாம். இன்று மிகவும் நல்ல நாள்.

**மைனர் முத்து:** அதற்காகத்தானே தங்களுக்குச் சொல்லியனுப்பினேன். (சில ஏடுகளை எடுத்து ஜோஸ்யர் கையில் கொடுக்கிறார். இருவரும் கீழே உட்காருகிறார்கள்)

**ஜோஸ்யர்:** (ஏடுகளைப் புரட்டிக்கொண்டே) தங்களுக்கு இப்போது நல்ல காலம். சுக்கிரன் சும்மாவா இருக்கிறான்? பெரியவர்கள் சிநேகம்; கன்றுகாலிகள் பெருக்கம், வருமானம் அதிகரிப்பு. புத்திர சந்தானம்......

**மைனர் முத்து:** என்ன ஜோஸ்யர்வாள்? மணமாகுமுன் புத்திர சந்தானக் கணக்குப் பார்க்கிறீர்களே? வேலி கட்டுவதற்குமுன் வேளாண்மை செய்த மாதிரி!

**ஜோஸ்யர்:** நீங்கள் வேண்டுமென்றாலும் வேண்டாமென்றாலும் இந்த மாதம் கண்டிப்பாய்க் கல்யாணம் முடிந்துவிடும்.

**மைனர் முத்து:** [ஆத்திரத்துடன்] அப்படியா! பெண் எந்தத் திசையில்?

**ஜோஸ்யர்:** நேரே மேற்கே! நல்ல மாந்தளிர் மாதிரி!

**மைனர் முத்து:** ஜோஸ்யம் நிறத்தைக் கூடச் சொல்லுகிறதா?

**ஜோஸ்யர்:** சொல்லாமல் என்ன? குருவிக்குளம் ஜமீன்தாருக்குக் குயில் மாதிரி பெண் கிடைக்கும் என்று சொன்னேன், அப்படியே கிடைத்தது!

**மைனர் முத்து:** அப்படியா? அவள் நன்றாய்ப் பாடுகிறாளா?

**ஜோஸ்யர்:** ஆடிப்பாடி ஜமீன்தாரை அவள் கைக்குள் வைத்துக் கொண்டாள். அது போதாதா?

**மைனர் முத்து:** உம். ஜோதிடம் வேறே என்ன சொல்கிறது?

**ஜோஸ்யர்:** உங்களுக்குப் புத்திர சந்தானம் நிறைய இருக்கிறது. ஐந்து ஆணும், ஆறு பெண்ணும்!

மைனர் முத்து: ஹஹ்ஹ! இவ்வளவு குழந்தைகளா?

ஜோஸ்யர்: மைனர்வாளுக்கு எத்தனைபிறந்தால்என்ன?

மைனர் முத்து: ஜோஸ்யர்வாள்! இன்னும் எத்தனை நாட்களில் நிச்சயமாக விவாகம் கைகூடும்? சரியாய்ப் பார்த்துச் சொல்லுங்கள்.

ஜோஸ்யர்: [சற்று யோசித்தபின்] நான் என்னத்தைச் சொல்வது? இன்று முடிந்தாலும் முடியலாம். நாளை முடிந்தாலும் முடியலாம். கிரகங்களுக்குள் அவ்வளவு நெருக்கடியான நிலைமை ஏற்பட்டிருக்கிறது!

மைனர் முத்து: அப்படியா? நான் ஒரு பெண்ணை நினைத்திருக்கிறேன், அது கைகூடுமா என்று பாருங்கள்.

ஜோஸ்யர்: ஒரு புஷ்பத்தின் பெயரைச் சொல்லுங்கள்.

மைனர் முத்து: புஷ்பத்தின் பெயரையா?...முல்லை!

ஜோஸ்யர்: முல்லை தானே! முல்லை என்றால் தொல்லைகள் இல்லை. எல்லையில்லா இன்பமுண்டாகும். இனி நீங்கள் கவலைப்பட வேண்டாம். காரியம் நிச்சயம் வெற்றிதான். தைரியமாகத் தங்கள் நடவடிக்கைகளை நடத்தலாம். போய் வரட்டுமா?

மைனர் முத்து: இதோ கொஞ்சம் பணம்!

(பணத்தைப் பெற்றுக்கொண்டு ஜோஸ்யர் வெளியே கிளம்புகிறார்)

ஜோஸ்யர்: (தனக்குள்) நான் இன்று நரி முகத்தில் தான் விழித்திருக்க வேண்டும். இப்படி மடையர்கள் உலகத்தில் இல்லாவிட்டால் என் கதி அதோகதிதான்! ‘பெண்’ என்றால் முப்பத்திரண்டு பற்களையும் காண்பிக்கிறான்!...... இவன் அழகிற்குக், கருங்குயில் குன்றத்துக் கருப்பாயிதான் கிடைப்பாள்!!

(போகிறார்)

(திரை)

## காட்சி: 14 சமையல் அறை

[கமலாவும் புஷ்பாவும் பேசிக் கொண்டிருக்கிறார்கள்]

கமலா: புஷ்பா!

புஷ்பா: என்னம்மா?

கமலா: நேற்று .........

புஷ்பா: என்னம்மா?

கமலா: என்னடி முழுப் பூசனிக்காயைச் சோற்றில் மறைக்கப் பார்க்கிறாய்? நேற்றுச் சாயந்திரம் தோட்டத்தில்......

புஷ்பா: ஒன்றுமில்லையம்மா. நான் பூப்பறிக்கப் போனேன்.

கமலா: போனால்......?

புஷ்பா: சேகர் அங்கே வந்தார்.

கமலா: வந்தால் உனக்கென்னடி அவனுடன் பேச்சு?

புஷ்பா: அம்மா! முதலில் நான் அவருடன் பேச வில்லை, அவர்தான்......

கமலா: நன்றாய் இருக்கிறது கதை! என்னடி ஆந்தை மாதிரி விழிக்கிறாய்?

புஷ்பா: 'பூ' யாருக்கு என்று கேட்டார். பதில் சொன்னேன். அவ்வளவுதான் போய்விட்டார்.

கமலா: அரை மணி நேரம் அரட்டை அடித்துக் கொண்டிருந்தீர்களே! ஒன்றும் பேசவில்லை என்று மழுப்பு கிறாய்! கம்பராமாயணத்தைக்கூட கால் மணி நேரத்தில் கதா பிரசங்கம் செய்து விடலாமே!

புஷ்பா: சேகர்தான் 'கன்னாபின்னா' வென்று பல கேள்விகளைக் கேட்டார். நான் அவருக்கு பதில் சொல்லாமல் இருக்க முடியுமா!

கமலா: புஷ்பா! நான் சொல்வதைக் கேள். நீ வயது வந்த பெண்! எத்தனையோ தடவை நீங்கள் இரண்டு

பேரும் தனிமையில் பேசப் பார்த்திருக்கிறேன். வீண் சனியனை விலைக்கு வாங்க வேண்டாம். நாமோ திக்கற்றவர்கள்! அவர்களுடைய உப்பைத் தின்று பிழைக்க வேண்டியவர்கள். சேகர் உன் சகோதரன் போன்றவன். சிறு பிள்ளைத்தனமாக இருக்காதே!

புஷ்பா: இல்லை, அம்மா!

கமலா: அவனுடன் இனிமேல் நீ நெருங்கிப் பழகக் கூடாது. அடிக்கடி அவன் அறைக்குப் போகாதே. ஏதாவது விபரீதம் ஏற்பட்டால் நமக்குப் பெருந் தீமை ஏற்படும். புஷ்பா! யாராவது தான் சாவதற்கு மருந்துண்பார்களா? மிராசுதார் மனைவி இதை அறிந்தால் நமக்குக் கேடுதான். ஜாக்கிரதை!

புஷ்பா: சரி, அம்மா! அவருடன் இனிமேல் பேசவே மாட்டேன்.

(திரை)

---

## காட்சி: 15 மிராசுதாரின் வீடு

[தபால் சேவகன் ஒரு கடிதத்தை மிராசுதாரிடம் கொடுத்து விட்டுப் போகிறான். அதை உடைத்து வாசிக்கிறார்.]

மிராசுதார்: (மகிழ்ச்சியுடன்) சரஸ்வதி! சரஸ்வதி! இதோ பார்! நம் சேகருக்கு நீதிபதி உத்தியோகம் கிடைத்து விட்டது.

(சரஸ்வதி விரைந்து வருகிறாள்)

சரஸ்வதி: கிடைத்துவிட்டதா? நான் நேற்றே சொல்லவில்லையா, எனது இடது கண் துடிக்கிறதென்று?... மோகனா! மோகனா!

(மோகனா வருகிறாள்)

மோகனா உன் அத்தானுக்கு நீதிபதி உத்தியோகம் கிடைத்துவிட்டது. நீ பெரிய யோகக்காரி. ஜட்ஜ் மனைவி ஆகிவிட்டாய்!

மிராசுதார்: இந்தக் கடிதம் வரும் வரும் என்று எவ்வளவு ஆவலாகக் காத்துக்கொண்டிருந்தேன். சேகருக்குச் சொல்லி அனுப்பு.

மோகனா: (ஜன்னல் வழியே வெளியே பார்க்கிறாள்) அதோ அத்தான் வருகிறார்கள்.

(சேகர் வருகிறான்)

மிராசுதார்! சேகர்! இதோ நம் கனவு பலித்தது! நீதிபதியாகச் சென்னைக்குப் போக வேண்டுமென்று உத்தரவு வந்திருக்கிறது.

சேகர்: (கடிதத்தைப் பார்த்துக்கொண்டு) இன்னும் ஒரு வாரந்தான் இருக்கிறது......

(கடிதத்தைப் பார்த்துக்கொண்டு உள்ளே போகிறான். சரஸ்வதியும் மோகனாவும் அவன் பின்னால் செல்லுகிறார்கள். முனிசாமி வருகிறான்)

முனிசாமி: எசமான்!

மிராசுதார்: என்னடா கத்துகிறாய்?

முனிசாமி: யாரோ வந்திருக்காங்க.

மிராசுதார்: மனிதர்கள் தானே?

முனிசாமி: ஆமாங்க.

மிராசுதார்: என்னடா பல்லைக் காட்டுகிறாய்!

முனிசாமி: சாமி! கால் சட்டை, பூட்ஸ், தொப்பி போட்டுக்கிட்டு ரெண்டுபேர் வந்திருக்காங்க.

மிராசுதார்: உள்ளே வரச்சொல்! மடையன்!

[முனிசாமி போகிறான். இரண்டு பேர்கள் வருகிறார்கள். மிராசுதாருக்கு வணக்கம் செலுத்தியபின் உட்காருகிறார்கள்]

ஒருவர்: நாங்கள் கிராமப் புனருத்தாரண உத்தியோகஸ்தர்கள். தங்களைப் பார்த்துவிட்டுப் போகலாம் என்று வந்தோம்.

மிராசுதார்: மிகவும் சந்தோஷம்!

மற்றொருவர்: தங்கள் ஊரில்......

மிராசுதார்: காவாலிப் பசங்கள் அதிகமாய்ப் போய் விட்டார்கள் என்றுதானே சொல்லுகிறீர்கள்?

ஒருவர்: இல்லை, ஸார்! ஒரு வாசகசாலை திறக்கலாம் என்று எண்ணுகிறோம்.

மிராசுதார்: பேஷாய்த் திறவுங்கள்! யாராவது பெரிய மனிதர்களை அழைத்துக்கூடத் திறக்கலாமே!

மற்றொருவர்: என்ன ஸார்! தங்களைவிடப் பெரிய மனிதர்களா இருக்கிறார்கள்? அதற்குக் கொஞ்சம் பொருள் உதவி தேவை.

மிராசுதார்: வாசகசாலைக்குப் புத்தகங்கள்தானே தேவை?

ஒருவர்: ஆமாம் ஸார்! சில புத்தகங்கள், சில வாரப் பதிப்புகள், சில தினசரிப் பத்திரிகைகள்!

மிராசுதார்: என்னிடம் சில புத்தகங்கள் இருக்கின்றன. என் அப்பா அவைகளை வெகு பத்திரமாக மரப் பெட்டிக்குள் வைத்திருந்தார்.

மற்றொருவர்: மிகவும் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள் கிறோம். ஒரு இடத்திலாவது தங்களைப் போல் தாராள மனப்பான்மையுடன் ஒருவரும் உதவி செய்ய முன் வர வில்லை.

மிராசுதார்: என்னிடம் 'பெரிய எழுத்து நல்ல தங்காள்' நான்கும், 'சுடலைமாடன் வில் பாட்டு' மூன்றும், 'விக்கிரமாதித்தன் கதை' இரண்டும், ஆக ஒன்பது புத்தகங்கள் இருக்கின்றன. இவைகளை இலவசமாகக் கொடுக்கிறேன்.

[வந்த இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்கிறார்கள்]

**ஒருவர்:** மேலும் விளையாடுவதற்கு 'வாலி பால்' வாங்கவேண்டும்.

**மிராசுதார்:** 'வாலி' பாலும் வேண்டாம். 'சுக்கிரீவன்' பாலும் வேண்டாம். பழைய சடுகுடு, பிள்ளையார்ப் பந்து, கிளித்தட்டு முதலியவைகளை விளையாடச் சொல்லுங்கள். நம்முடைய பிள்ளையார் பந்தைத்தானே சென்னையில் 'கிரிக்கெட்' என்று பெயரை மாற்றி விளையாடுகிறார்களாம்!

**மற்றொருவர்:** இவைகளுக்கெல்லாம் கொஞ்சம் நன்கொடை தேவை.

**மிராசுதார்:** என்ன ஸார்! மிராசுதார் என்றால் பணம் காய்க்கும் மரம் என்று நினைக்கிறீர்கள் போலும்!

**ஒருவர்:** நம்முடைய கிராமங்கள் தங்களைப் போன்ற பிரபுக்களால்தான் புனருத்தாரணம் செய்யப்பட வேண்டும்.

**மிராசுதார்:** நாள் தவறினாலும் நிதி திரட்டும் வேலை மட்டும் தவறாது. சிசுபரிபாலன நிதி! க்ஷயரோக நிவாரண நிதி! புற்று நோயைப் போக்கடிக்க நிதி! விதவைகள் விடுதிக்கு நிதி!...... உயிரோடிருக்கிறவர்களுக்கும் நிதி! சாகப் போகிறவர்களுக்கும் நிதி! இப்படி 'நிதி, நிதி' என்று உபத்திரவம் செய்தால் எங்களுக்கு எப்படி மன நிம்மதி ஏற்படும்?

இது மட்டுமா? அரசாங்கத்தின் உபத்திரவம் வேறு. 'வரி, வரி' என்று மக்கள் மீது வரியைப் போட்டுக்கொண்டே போகிறார்கள். கொஞ்ச காலம் சென்றால் மக்களெல்லாம் வரிப் புலிகள் ஆகிவிடுவார்கள்!

நீங்கள் வருகிற வெள்ளிக்கிழமை வாருங்கள். என்னால் இயன்றதைக் கொடுக்கிறேன்.

[உத்தியோகஸ்தர்கள் இருவரும் மிராசுதாருக்கு வணக்கம் செலுத்திவிட்டு வெளியே போகிறார்கள்]

(திரை)

## காட்சி : 16 மிராசுதார் வீடு

[மிராசுதாரைப் பொன்னம்பலம் சந்திக்கிறார்]

மிராசுதார்: என்ன பொன்னம்பலம்! ஆளைக் கண்ணிலே காணக் கிடைக்கவில்லையே!

பொன்னம்பலம்: சென்னைக்குப் போயிருந்தேன்.

மிராசுதார்: என்ன விசேஷம்?

பொன்னம்பலம்: என் மனைவிக்குச் சுகமில்லை.

மிராசுதார்: உடம்பிற்கு என்ன?

பொன்னம்பலம்: மூன்று வருஷமாகத் தீராத தலைவலி!

மிராசுதார்: தலைவலியா?

பொன்னம்பலம்; மனைவி 'ஒருவனின் வாழ்க்கையை வெட்டும் கூரிய கத்தி' என்று ஒரு கவிஞன் கூறியிருப்பது என் விஷயத்தில் உண்மை.

மிராசுதார்: ஹஹ்ஹ!

பொன்னம்பலம்: ஆமாம் ஸார் ஆமாம்! என்னமோ படித்த பெண் என்று என் அப்பா சனியனை என் தலையில் கட்டிவிட்டார். அவளால் நான் அனுபவிக்கும் தொல்லை கொஞ்சம் அல்ல.

மிராசுதார்: பொன்னம்பலம்! இப்படி ஏன் மனம் உடைந்து பேசுகிறாய்? துன்பம் இல்லாத குடும்பம் உண்டா? சம்சாரம் பெரிய சாகரம்! அதில் நீந்தித்தான் கரை சேர வேண்டும்.

பொன்னம்பலம்: அதை நல்ல மோட்டார் படகில் ஏற்றிக்கொண்டு கடந்து செல்பவர்களும் உலகத்தில் இருக்கத்தானே செய்கிறார்கள்!!

மிராசுதார்: அப்படிப்பட்டவர்கள் ஆயிரத்தில் இரண்டு பேர்கள்தான் இருப்பார்கள்!

பொன்னம்பலம்: என்ன இருந்தாலும் நமக்கு மேலாகக் கொஞ்சம் படித்த பெண்களை விவாகம் செய்தால்

பெரிய தொந்தரவுதான்! அப்படிப்பட்ட பெண்கள் பேசியே ஆண்களைத் தோற்கடித்து விடுவார்கள்.

மிராசுதார்: அது பெண்களின் இயற்கைக் குணந் தானே. அவர்களுடைய நாக்கு ஒன்றுந்தான் ஒரு போதும் களைப்படையாது.

பொன்னம்பலம்: இந்த 'ரேஷன்' காலத்தில் 'பேஷன்' 'பேஷன்' என்று பெண்கள் குடும்பத்தில் பெரிய 'கமோஷன்' செய்கிறார்கள்! நன்றாய் உடுத்த வேண்டியது! உலாவ வேண்டியது. இதுதானே அவர்களின் வாழ்க்கை லட்சியம்! கடும் பசியால், கணவன் இல்லம் வரும்போது காளிதாசனிலும் கம்பனிலும் கருத்தைப் பறிகொடுத்துக் கவனியாததுபோல் வீற்றிருப்பார்கள்! சினிமாப் பத்திரிகைகளை அட்டை முதல் அட்டை வரை அடங்காத ஆவலுடன் அலசிப் பார்ப்பார்கள்! கொண்ட கணவன் கோபப்பட்டால் மௌன சத்யாக்கிரகம் ஆரம்பித்து விடுவார்கள்!

மிராசுதார்: படித்த பெண்கள் அப்படித்தான் இருப் பார்கள், அப்பா!

பொன்னம்பலம்: தேவாங்கு மாதிரியா? 'பூ' என்று ஊதினால் பறந்து விடுவார்கள்!

மிராசுதார்: அதனால்தான் யாரோ .கவிஞன் ஒருவன் பெண்களை "வண்ணாத்திப் பூச்சிகள்" என்று சொல்லி யிருக்கிறான் போலும்!

பொன்னம்பலம்: அந்தக் காலத்தில் நம் செந்தமிழ் நாட்டுப் பெண்மணிகள் முறத்தால் புலியை விரட்டி அடித்தார்களாம்! இக்காலத்து நாகரிக மணிகளோ முறத்தைக் கையில் தூக்கக்கூடச் சக்தியற்றவர்களாய் இருக்கிறார்கள். காலம் கெட்டுப்போச்சு, ஸார், கெட்டுப் போச்சு! என்னமோ சிவப்பு மையை உதடுகளில் பூசிக்

கொள்ளுகிறார்கள்! கண் இமைகளில் கருப்பு மை! எவ்வளவு அழகு என்று பார்த்தீர்களா? நம் பெண்கள் சைனு பஜாரில் விளம்பரத்திற்காக நிறுத்தப்பட்டிருக்கும் பொம்மைகள் போலல்லவா இருக்கிறார்கள்?

மிராசுதார்; நாம் இருப்பது இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதி அல்லவா?

பொன்னம்பலம்: அது மட்டுமா? 'சிந்தாமணி'ச் சேலை; 'நாம் இருவர்' ஜாக்கெட். இன்னும் என்ன மெல்லாமோ போட்டுக் கொள்ளுகிறார்கள்! கிராமத்துப் பெண்கள் சாதாரண ஆடைகளை அணிந்து கொள்கிறார்கள். அவர்கள் அழகு, குறைந்தா போய்விட்டது?..... பெண்கள் இல்லத்தின் இராணிகளாகவும் குடும்பவிளக்காகவும் விளங்க வேண்டும். நல்ல குழந்தைகளைப் பெற்றெடுத்து, அவர்களை வளர்த்து நாட்டின் முன்னேற்றத்திற்காகச் சேவைசெய்யத் தயார் செய்ய வேண்டியது பெண்களின் கடமை அல்லவா?

மிராசுதார்: உண்மை!

பொன்னம்பலம்: ஆனால் தற்காலப் பெண்களை மேற் பார்ப்பதற்குத்தான் ஆண்களுக்கு நேரம் சரியாய் இருக் கிறது! நாடு உருப்பட்ட மாதிரிதான்!...... என்னமோ வந்த காரியத்தை விட்டுவிட்டு என்னவெல்லாமோ பேசி விட்டேன்.

மிராசுதார்: பொன்னம்பலம்! நேற்றுத்தான் சேகருக்கு நீதிபதி உத்தியோகத்திற்கு உத்தரவு வந்திருக்கிறது.

பொன்னம்பலம்: மிகவும் மகிழ்ச்சி! ஆகவே என் வேலையை ஆரம்பித்து விடலாம் அல்லவா?

மிராசுதார்: பேஷாக! நகை, ரொக்கம் இவை களெல்லாம் திட்ட வட்டமாக எவ்வளவென்று முதலில் கேட்டுவிட்டு வரவேண்டும். அதன் பின்தான் மற்றப் பேச்சுகளை ஆரம்பிக்க வேண்டும்.

பொன்னம்பலம்: அதெல்லாம் நான் பார்த்துக் கொள்கிறேன். போய்வரட்டுமா?

மிராசுதார்: நல்லது.

[பொன்னம்பலம் போகிறார்]

(திரை)

---

## காட்சி: 17 சேகரின் அறை

[சேகர் கண்ணாடியின் முன் நின்றுகொண்டு தலையை வாரிக் கொண்டிருக்கிறான். மோகனா பின்புறமாக வந்து அவன் சட்டையைப் பிடித்து இழுக்கிறாள்]

சேகர்: மோகனா! இந்த வால் சேட்டையை என்னிடமா காண்பிக்கிறாய்?

மோகனா: அத்தான்! நான் குரங்கு என்று நினைத் தீர்களா?

சேகர்: வாலில்லாக் குரங்கு! அப்படித்தானே!

மோகனா: என்ன அத்தான்! இப்படி முகத்தைச் சுழித்துக்கொண்டு பேசுகிறீர்கள்! சும்மா விளையாட்டாக இப்படிச் செய்தால்......

சேகர்: விளையாட்டு! சிறு பாப்பா! விளையாட ஆசைப் படுகிறது! புஷ்பாவும் உன்னைப்போல் பெண்தானே! அவள் எப்படி இருக்கிறாள் பார்த்தாயா?

மோகனா: அத்தான்! நான் தங்களிடம் விளையாடாமல் வேறு யாரிடம் விளையாட முடியும்?

சேகர்: விளையாடுவதற்குச் சமயம் சந்தர்ப்பம் இல்லையா?

மோகனா: அடே அப்பா! இந்த ஆண் பிள்ளைகளே இப்படித்தான்! திடீரென்று மீசை துடித்துவிடும்.

சேகர்: மீசை துடிக்கிறதோ துடிக்கவில்லையோ வயது வந்த பெண்கள் அடக்க வொடுக்கமாக நடக்கவேண்டும் என்றுதான் கூறுகிறேன்.

மோகனு: நான் அப்படி அடக்கமில்லாமல் சூர்ப்பனகை மாதிரியா போய்விட்டேன்? நீங்கள் விரும்பாததினுல் 'டான்ஸ்' ஆடுவதைக்கூட விட்டு விட்டேன்.

சேகர்: மோகனு! நன்ருய் ஆடு; பாடு. செய்ய வேண்டியதைக் குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிட்ட காலத்தில் செய்ய வேண்டும். அப்பொழுதுதான் அதனுல் பயனுண்டு.

[சரஸ்வதி வருகிருள்]

சரஸ்வதி: என்னடா இது?

சேகர்: ஒன்றுமில்லை அம்மா! மோகனுவிற்குக் குறும்பு அதிகமாய்ப் போய்விட்டது.

சரஸ்வதி: நீ அவளுடைய அத்தான்! குறும்பு செய்யத்தானே செய்வாள்.

மோகனு: நானும் அதைத்தான் சொன்னேன். அதற்குள் அத்தானுக்கு 'குர்' என்று கோபம் வந்து விட்டது.

சேகர்: பாருங்கள் அம்மா! அவளுடைய போக்கிரித் தனத்தை. 'குர்' என்கிருளே நான் நாயா?

சரஸ்வதி: அவள் சொல்லக் கடமைப் பட்டவள். நீ கேட்கக் கடமைப் பட்டவன். பிற்காலத்தில் நீங்கள் இரண்டு பேரும் எப்படித்தான் காலத்தைத் தள்ளப் போகிறீர்களோ! சாப்பிட வாருங்கள், போகலாம்.

[போகிருர்கள்]

## காட்சி : 18 மைனர் முத்துவின் வீடு

[புரோக்கர் பொன்னம்பலம் வருகிறார்]

மைனர் முத்து : வாருங்கள்! வாருங்கள்!

பொன்னம்பலம் : குட் நியூஸ்!

மைனர் முத்து : என்ன காரியம் பழமாகி விட்டதா?

பொன்னம்பலம் : பழமான மாதிரிதான்! நம் கையில் என்ன இருக்கிறது? எல்லாம் அவன் செயல்!

மைனர் முத்து : அவளிடம்...... புஷ்பாவிடம் பேசினீர்களா?

பொன்னம்பலம் : அவள் அம்மாவிடம் பேசினேன்.

மைனர் முத்து : அம்மாவிடமா?

பொன்னம்பலம் : ஆம் எந்தக் காரியம் செய்தாலும் சரியான வழியில்தானே போகவேண்டும். உங்களுக்குத் தெரியாத விஷயமா! பெரிய உத்தியோகஸ்தர்களைப் பார்க்க வேண்டுமானால் அவர்களுடைய வேலைக்காரனைத்தான் முதலில் பார்க்க வேண்டும். அப்பொழுதுதான் காரியம் பலிக்கும்.

மைனர் முத்து : உண்மை! புஷ்பாவின் அம்மா என்ன சொன்னாள்?

பொன்னம்பலம் : முதலில் ஒரேயடியாக முடியாது என்று சாதித்து விட்டாள்.

மைனர் முத்து : மறுத்து விட்டாளா?

பொன்னம்பலம் : ஆம். கொஞ்சம் பணத்தைக் காட்டினேன். இசைந்து விட்டாள். பணத்தின் மகிமையே மகிமை! பணம் என்றால் பிணமும் வாய் திறக்குமல்லவா?

மைனர் முத்து : பணம் பாதாளம் வரை அரசு செலுத்தும் என்பார்கள் பெரியோர்கள்! 'சரி' என்று சொல்லி விட்டாளா?

பொன்னம்பலம்: கொஞ்சம் யோசித்துச் சொல்லு கிறேன் என்று சொன்னாள். நான் அவளைக் குரங்குப் பிடியாய்ப் பிடித்துக் கொண்டேன். தப்பிக்க வழியில்லாமல் திணறிப்போய் விட்டாள்.

மைனர் முத்து: அப்படியா? முடிவாக என்ன சொன்னாள்?

பொன்னம்பலம்: வருகிற ஆவணி மாதம் நல்ல நாள் பார்த்துக் கல்யாணம் வைத்துக் கொள்ளலாம் என்று சொன்னாள். ஆனால் ஒன்று மட்டும்......

மைனர் முத்து: அது என்ன?

பொன்னம்பலம்: புஷ்பாவைக் கல்யாணம் செய்வ தெல்லாம் சரிதான்! கடைசி மட்டும் அவளை வைத்துக் காலந்தள்ள வேண்டுமே! அதை நினைத்துத்தான் அவளுடைய அம்மா கொஞ்சம் பயப்படுகிறாள்.

மைனர் முத்து: புரோக்கர்வாள்! புஷ்பாவை அடை வதற்காக ஊசி மேல் தவம் இருக்கச் சொன்னாலும் செய்யத் தயார்! அவள் எனக்குக் கிடைத்துவிட்டால் என் கண்ணின் கருமணி போல் வைத்துக் கொள்வேன். கிடைத்தற்கரிய புதையல் கிடைத்தால் அதைக் காப்பாற்றாதவன் முட்டாள்!

பொன்னம்பலம்: தாங்கள் யாரென்று எனக்கு நன்றாய்த் தெரியும்! ஆனால் நீங்கள் கொஞ்ச நாட்கள் பொறுமையாய் இருக்கவேண்டும். அவசரப்பட்டு அவளைப் பார்ப்பதற்கோ, அவளுடன் பேசுவதற்கோ முயற்சி செய்து விடாதீர்கள். மைனர்வாள்! கிணற்று நீரை வெள்ளமா கொண்டு போய்விடும்?

மைனர் முத்து: நான் அவ்வளவு முட்டாளா? ஆக்கப் பொறுத்தவன் ஆறப் பொறுக்க மாட்டேனா?

பொன்னம்பலம்: வெண்ணெய் திரண்டு வரும்போது தாழி உடைந்துபோகக் கூடாது. அதற்காகத்தான் சொன்னேன். நான் போய்வரட்டுமா?

மைனர் முத்து: கொஞ்சம் பொறுங்கள். நான் கொடுத்ததாக இந்த நூறு ரூபாய் நோட்டை புஷ்பாவிடம் கொடுத்து விடுங்கள்.

பொன்னம்பலம்: ரொம்ப சரி! இனிமேல் 'ரூபாய்' சேலை, ஜாக்கெட்' என்று கொடுக்க வேண்டியதுதானே! புஷ்பா கொடுத்து வைத்தவள்! தங்களுடைய வெகுமதி கிடைத்தால் மிகவும் மகிழ்ச்சியடைவாள்.

மைனர் முத்து; சரி! காரியத்தைச் சீக்கிரம் முடித்து விடவேண்டும்.

[போகிறார்]

பொன்னம்பலம்: முட்டாள்களில் முதல் பரிசு இவனுக்குத்தான் கொடுக்கவேண்டும்! இந்தக் கருங் குரங்குக்குப் புஷ்பா வேண்டுமாம்! தொழிலாளிகளின் இரத்தத்தைப் பிழிந்து சம்பாதித்த பணம் இப்படித்தான் போகும்! பள்ளியில் பயிலாத மடையன் இப்படி நூறு ரூபாய் நோட்டுக்களைக் கொடுத்துதான் அறிவைப் பெறல் வேண்டும்!!

[போகிறார்]

(திரை)

---

## காட்சி : 19 மிராசுதாரின் வீடு

[மிராசுதார் சாய்வு நாற்காலியில் உட்கார்ந்திருக்கிறார். கமலா அவ்வறைக்குள் வருகிறாள்]

மிராசுதார் : என்ன கமலா ?

கமலா : வெள்ளம் வருமுன் அணை போடவேண்டும்.

மிராசுதார் : அணை போடுவதற்கு எஞ்சினீயரைத்தான் பார்க்க வேண்டும் !

கமலா : எல்லாம் தங்களுக்கு விளையாட்டுத்தான் !

மிராசுதார் : நீ கூறுவது எனக்கொன்றும் புரியவில்லையே !

கமலா : என் மகள் புஷ்பா......

மிராசுதார் : புஷ்பா விஷயமாக நீ கவலைப் படாதே. சீக்கிரமே ஒரு நல்ல பையனைப் பார்த்து கல்யாணத்தை முடித்து விடலாம்.

கமலா : அதைப்பற்றி நான் சொல்லவில்லை...... ஆனால்.......

மிராசுதார் : வேறு விஷயம் என்ன? ஓஹோ ! புஷ்பாவும் மோகனும் அடிக்கடிச் சச்சரவிட்டுக் கொள்ளுகிறார்களே, அதைப்பற்றிச் சொல்லுகிறாயா ?

கமலா : இல்லை.

மிராசுதார் : அப்படியானால் ?

கமலா : சேகரைப் பற்றித்தான்......

மிராசுதார் : சேகரைப் பற்றியா ?

கமலா : ஆம். சேகரும் புஷ்பாவும் மிகவும் நெருங்கிப் பழகுகிறார்கள்...

மிராசுதார் : இதற்குத்தானா இவ்வளவு பீடிகை? இரண்டு பேரும் சகோதரனும் சகோதரியும் போல் நெருங்கிப் பழகுவதைப் பார்க்க நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்.

கமலா: அப்படியல்ல. அவர்கள் ஒருவரையொருவர் காதலிக்கிறார்கள்!

மிராசுதார்: ஹஹ்ஹ! எல்லாம் வீண் பீதி! காதல் என்றால் எத்தனை பலம் என்பான் சேகர்! அது எங்கே கிடைக்கும் என்று கேட்பாள் புஷ்பா! சிறு குழந்தைகள்! வீணாக மனதைப் புண்படுத்திக் கொள்ளாதே.

கமலா: நான் சொல்லிவிட்டேன். இதனால் பெரிய விபரீதம் ஏற்படப் போகிறது. நம் இருவருக்கும் பிறந்த புஷ்பாவைச் சேகர் காதலிப்பது என்றால்......

மிராசுதார்: நம்ப முடியாத காரியம்!

கமலா: நம்ப முடியாத விஷயம் அல்ல! நன்றாய் இல்லை என்றுதான் கூறுகிறேன். சகோதரன் சகோதரியைக் காதல் செய்வது போலல்லவா இருக்கிறது! இதைக் கண்டிப்பாய்த் தடுத்துவிட வேண்டும்.

மிராசுதார்: நானே சேகரிடம் இவ்விஷயத்தைக் கூறிக் கண்டித்து விடுகிறேன்.

கமலா: அதை விட......

மிராசுதார்: நல்ல வழி இருக்கிறதா?

கமலா: புஷ்பாவை எவன் கையிலாவது பிடித்துக் கொடுத்து விடுவதுதான் மேலான வழி.

மிராசுதார்: கவலைப் படாதே, கமலா!

கமலா: நானும் புஷ்பாவை எச்சரிக்கிறேன்.

[கமலா போகிறாள். சரஸ்வதி வருகிறாள்]

மிராசுதார்: என்ன, சரஸ்வதி?

சரஸ்வதி: எப்போது பார்த்தாலும் வேலைக்காரியிடம் 'குசு, குசு' வென்று என்ன பேசுகிறீர்கள்?

மிராசுதார்: அவளுடன் பேசுவதற்கு என்ன இருக்கிறது?

சரஸ்வதி: இல்லாமலா இப்படிப் பேசுகிறீர்கள்? நானும் எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டுதான் இருக்கிறேன். என்னை முட்டாள் என்று நினைக்க வேண்டாம்.

மிராசுதார்: அடே அப்பா! கோபம் வந்து விட்டதா?

சரஸ்வதி: வராமல் என்ன செய்யும்?

மிராசுதார்: இந்தப் பெண்களே இப்படித்தான்! பெரிய சந்தேகப் பேர்வழிகள்!

சரஸ்வதி: ஆண் பிள்ளைகள் யோக்யமாய் நடந்தால் அவர்களை நாங்கள் தலையில் தூக்கிச் சுமப்போம். ஆனால் அவர்கள் கபட நாடகம் நடத்த ஆரம்பித்து விட்டால் நாங்கள் என்ன செய்ய முடியும்? ஆடவர்கள் பெரிய மாயா ஜால வித்தைக்காரர்கள்!

மிராசுதார்: பெண்கள் முன்னால் வித்தை செய்து காட்டுபவர்கள் என்றுதானே கூறுகிறாய்?

சரஸ்வதி: உங்கள் பேச்சுக்கு எதிர்ப் பேச்சு என்றால் பேச முடியாது. கமலாவிடம் தாங்கள் அடிக்கடிப் பேசுவது எனக்குச் சரியாகத் தோன்றவில்லை. பின்னால் இந்தச் சரசு சொன்னாளே என்று வருத்தப்பட வேண்டாம்!

மிராசுதார்: நான் பார்த்துக்கொண்டு இருக்கிறேன், ஒரே அடியாகப் பேச்சை வளர்க்கிறாயே! போ உள்ளே, உன் வேலையைப் பார்த்துக்கொண்டு.

சரஸ்வதி: போகாமல் உங்களிடம் பேசிக் கொண்டிருந்தால் உலை பொங்கி விடுமா?

[போகிறாள்]

மிராசுதார்: (தனக்குள்) ஹ ஹ் ஹ! பெண்கள்! பலே பேர்வழிகள்! ஆண்களின் மனதைப் படம் பிடிக்கப் பார்க்கும் எக்ஸ்ரேகள்.

(திரை)

## காட்சி : 20 சேகரின் அறை

[சேகர் சாய்வு நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு பத்திரிகை படித்துக் கொண்டிருக்கிறான். மோகனா அவனுக்குப் பின்புறமாக வந்து அவனுடைய கண்களைத் தன் கைகளால் மறைக்கிறாள்]

**சேகர் :** மோகனா !

**மோகனா :** (கைகளை எடுத்து விட்டு) ஏன் புஷ்பாவாக இருக்கக் கூடாது ?

**சேகர் :** என்னைத் தொடுவதற்குப் புஷ்பாவிற்குத் தைரியம் போதாது.

**மோகனா :** தைரியம் போதாதா ? மாய வலையில் தங்களைப் பிடிப்பதற்கு பெரும் முயற்சி செய்து கொண்டிருக்கிறாள் !

**சேகர் :** அம்முயற்சி நீ இருக்கும் வரை வெற்றியடையாது !

**மோகனா :** போங்கள் அத்தான்! அத்தான்! தாங்கள் நாளைக்குச் சென்னைக்குப் போகிறீர்கள் அல்லவா ?

**சேகர் :** ஆம் மோகனா! உன் அத்தான் நீதிபதி ஆவதைப் பற்றி உனக்கு மகிழ்ச்சிதானே ?

**மோகனா :** நான் மகிழ்ச்சியடையாமல் வேறு யார்தான் மகிழ்ச்சியடைய முடியும் ?

**சேகர் :** மோகனா ! இன்று ஏன் முக வாட்டத்துடனிருக்கிறாய் ? தலையை ஏன் வாரிக்கொள்ள வில்லை ?

**மோகனா :** தாங்கள் இருக்கும் போது எனக்கேன் முகவாட்டம் ? ஆனால்......

**சேகர் :** மோகனா! நீ என்ன சொல்ல விரும்புகிறாய்?

**மோகனா :** அத்தான் ! தாங்கள் அன்று கொடுத்த 'பிராமிஸை' ஞாபகப்படுத்த வந்தேன்.

**சேகர் :** 'பிராமிஸா'? நானா கொடுத்தேன்? யாருக்கு?

மோகனு: அதற்குள் மறந்து விட்டீர்களா? எனக்குத் தான் கொடுத்தீர்கள்!

சேகர்: எனக்கு ஞாபகம் இல்லை! என்ன சொன்னேன்?

மோகனு: நீதிபதியானபின் ஞாபகம் எப்படி இருக்கும்?

சேகர்: மோகனு! உண்மையிலே மறந்து விட்டேன்.

மோகனு: சென்னைக்குப் போனபின் என்னைப் பற்றி நினைக்கவா போகிறீர்கள்?

சேகர்: சுத்தப் பைத்தியமாய் இருக்கிருய்! மோகனு! நான் உன்னை மறப்பேனு? கணவன் வீட்டிற்குப் போய் விட்டாலுங்கூட நான் உன்னை மறக்க மாட்டேன். தெரிகிறதா?

மோகனு: அத்தான்! என் உள்ளக் கோவிலில் உலாவும் உயிருள்ள தெய்வமல்லவா தாங்கள்!

சேகர்: ஆனுல்...... அக் கோவிலில் குடி கொள்ள அத்தெய்வம் விரும்பினுல்தானே!

மோகனு: உங்கள் வார்த்தைகளால் என்னைக் கொல்ல வேண்டாம்.

சேகர்: நானு உன்னைக் கொல்லுகிறேன்? நீயல்லவா தற்கொலை செய்ய முயற்சிக்கிருய்?

மோகனு: (விம்மிக் கொண்டே) அத்தான்! என் திக்கற்ற நிலைமையைச் சற்றே நினைத்துப் பாருங்கள்.

சேகர்: மோகனு! இவ்விஷயத்தில் நான் உனக்கு ஒன்றும் செய்ய முடியாததைப் பற்றி மிகவும் வருந்து கிறேன். என்னை மன்னிக்கவும்.

மோகனு: அத்தான்! தாங்கள் இப்படிச் சொல்லு வீர்கள் என்று நான் கனவிலும் நினைக்கவில்லையே! இலவு காத்த கிளி போலல்லவா என் வாழ்க்கை போய்விட்டது!

சேகர்: மோகனு! இப்படி ஏன் வீணுக......

மோகனு: அத்தான்! புஷ்பாவின் மீது தாங்கள் செலுத்தும் அன்பைப் பெற எனக்கு உரிமை இல்லையா?

சேகர்: அவள் என் இருதய பீடத்தில் வீற்றிருக்கும் பெண் தெய்வமல்லவா?

மோகனு: அவள் கொடுத்து வைத்தவள்! நான் பாவி! அவ்வளவுதானே? (கையால் முகத்தை மறைத்துக் கொண்டு விம்மி விம்மி அழுகிருள். புஷ்பா அங்கு வருகிருள். திகைத்து நிற்கிருள்)

புஷ்பா: அக்கா! அம்மா கூப்பிடுகிருர்கள்.

[மோகனுவும் புஷ்பாவும் போகிருர்கள்]

(திரை)

---

## காட்சி: 21 பூங்கா

[புரோக்கர் பொன்னம்பலம் மைனர் முத்துவைச் சந்திக்கிருர்]

பொன்னம்பலம்: வணக்கம், மைனர்வாள்!

மைனர் முத்து: வணக்கம். என்ன ஒரே குஷியாய் இருக்கிறீர்கள்?

பொன்னம்பலம்: அதிர்ஷ்டம் நம் பக்கம் இருக்கும் போது யார்தான் நம்மை அசைக்க முடியும்? எல்லாம் அவன் செயல்!

மைனர் முத்து: அப்படி என்ன அதிர்ஷ்டம்?

பொன்னம்பலம்: எல்லாம் தங்களுக்குத்தான்! நேற்று அந்த நூறு ரூபாய் நோட்டையும் புஷ்பாவிடம் கொடுத்தேன்.

மைனர் முத்து: கொடுத்தீர்களா?

பொன்னம்பலம்: அதை வாங்கினவுடன் அந்த அசோக்க சக்கரத்தில் ஒரு முத்தமும், மூன்று சிங்கங்

களுக்கு ஒரு முத்தமும் கொடுத்தாள். அந்த நோட்டு முழுதும் நனைந்து போய்விட்டது! அவள் தங்களுக்கு முத்தம் கொடுப்பது போல்தான் நான் நினைத்துக் கொண்டேன்.

மைனர் முத்து: கொடுத்தாளா? உண்மையாகவா? அது தான் நேற்று எனக்கு வலது கண் துடித்தது! மூன்று தும்மல்கள் கூடப் போட்டேன். புஷ்பா என்னைப் பற்றி ஏதாவது சொன்னாளா?

பொன்னம்பலம்: என்ன இப்படிக் கேட்கிறீர்கள்? அவளைச் சந்திக்கும் போதெல்லாம் தங்களைப் பற்றித்தான் பேச ஆரம்பித்து விடுகிறாள். அவளுக்கு எப்போதும் உங்கள் ஞாபகந்தானும்! அவளுடைய வாழ்க்கையில் தாங்கள் ஓர் ஒப்பற்ற முத்தாக விளங்க வேண்டுமென்பதே அவளுடைய பேரவா! அவள் அம்மாவும் இப்பொழுது வழிக்கு வந்துவிட்டாள். அவளும் தங்களைப் புகழ்ந்து பேச ஆரம்பித்து விட்டாள். மைனர்வாள்! புஷ்பா தங்களிடம்......

மைனர் முத்து: வேறு என்ன கேட்டாள்?

பொன்னம்பலம்: தங்களுடைய "போட்டோ" வேண்டுமாம்!

மைனர் முத்து: 'போட்டோ'வா?

பொன்னம்பலம்: கேட்கத்தானே செய்வாள்? மைனரை வேண்டாம் என்று எந்தப் பெண்ணும் சொல்லுவாளா?

மைனர் முத்து: தற்சமயம் எடுத்த படம் என்னிடம் இல்லை. நாளைக்கு ஸ்டுடியோவுக்குப் போய் எடுத்துக் கொடுத்து விடுகிறேன்.

பொன்னம்பலம்: நம் ஊர் "இம்பீரியல் ஸ்டுடியோ" விற்குப் போங்கள். நல்ல "போஸ்" ஒன்று எடுங்கள்.

**மைனர் முத்து :** அங்கேதான் என் அப்பா போட்டோ எடுப்பது வழக்கம்.

**பொன்னம்பலம் :** சரிகை வேஷ்டியும், 'அல்பேகா' கோட்டும், விசிறி மடிப்பு அங்கவஸ்திரமும் போட்டுக் கொண்டு ஆளை அபாரமாய்க் காட்டும்படி படம் எடுங்கள்.

**மைனர் முத்து :** சரி! இதோ கொஞ்சம் பணம் பெற்றுக் கொள்ளுங்கள். காரியம் முடிந்ததும் வேறு வெகு மானம் உண்டு.

[போகிறார்]

**பொன்னம்பலம் :** சோளக் கொல்லை பொம்மை மாதிரி இருக்கிறான். இவன் படத்தைப் பார்த்தால் புஷ்பா மயக்கம் போட்டுக் கீழே விழுந்து விடுவாள்! மண்டுகத்திற்கு மணப் பெண்ணல்லவா கேட்கிறது! முகரக் கட்டைக்கு போட்டோ வேறு!

[போகிறார்]

(திரை)

---

## காட்சி : 22 மிராசுதாரின் வீடு

[மோகனும் சரஸ்வதியும் பேசிக் கொண்டிருக்கிறார்கள்]

**மோகன் :** அத்தை! நேற்று புஷ்பாவும் அத்தானும் ஏதோ ரகசியம் பேசிக் கொண்டிருந்தார்கள்.

**சரஸ்வதி :** நீ பார்த்தாயா?

**மோகன் :** நான் என் கண்ணால் பார்த்தேன். தோட்டத்தில் பேசிக் கொண்டிருந்தார்கள். என்னைப் பார்த்ததும் புஷ்பா திருட்டுப் பார்வை பார்த்துக்கொண்டு மெள்ள நழுவி விட்டாள்.

**சரஸ்வதி :** இவ்வளவு தூரம் போய்விட்டதா விஷயம்?

**மோகன் :** வேலைக்காரக் கழுதை கனைத்துக்கொண்டு அலைகிறது!

சரஸ்வதி: நாயை வீட்டைவிட்டுத் துரத்த வேண்டியது தான்! இங்கே காத்துக் கிடந்தது போதும். அவளுடைய தாயும் பலே கைகாரி. எப்போது பார்த்தாலும் உன் மாமா விடம் ரகசியப் பழக்கம் பேசுகிருள்!

மோகன: இந்தக் கோட்டான்களுக்கு இனிமேல் வீட்டில் இடம் கொடுத்தால் வீடு கட்ட மண்ணுய்ப் போய்விடும்.

சரஸ்வதி: எல்லாம் அவர் கொடுக்கிற தெம்புதான். அவர் வரட்டும் சொல்லுகிறேன்! மூதேவிகளுக்குப் பட்டுப் புடவை, தங்க நகைகள் வேறு!

மோகன: மாமா இந்தக் குரங்குகளை எங்கிருந்துதான் கொண்டு வந்தார்களோ? இடம் கொடுத்தால் மடம் பிடுங்குவான் என்ற கதையாய்த்தான் இருக்கிறது! மூதேவி! கெட்ட கேட்டிற்கு நீதிபதி மாப்பிள்ளை வேண்டுமாம்!!

சரஸ்வதி: கழுதைகளைப் போன இடம் புல் முளைத்துப் போகும்படி எங்கேயாவது விரட்டி அடிக்க வேண்டும்! வர வர நிலைமை மோசமாகிக் கொண்டு வருகிறது!

மோகன: அத்தை! நீங்கள் சும்மா இருங்கள். நான் ஒரு கை பார்த்து விடுகிறேன் அந்தப் புஷ்பாக் கழுதையை! உதைக்கிற உதையில் 'வள், வள்'ளென்று கத்திக்கொண்டு ஓடச் செய்து விடுகிறேன்.

சரஸ்வதி: நீ சொல்லுகிறதுதான் சரி! கழுதை களுக்கு நன்ருய் உதை கொடுத்த பின் தான் வீட்டை விட்டு விரட்ட வேண்டும். அப்பொழுதுதான் புத்தி வரும்! ......மோகன! குற்றம் உன் மேலும் இருக்கிறது!

மோகன: அத்தை! நான் என்ன குற்றம் செய்தேன்?

சரஸ்வதி: உனக்கு அவளை வசப்படுத்தத் தெரிய வில்லை! அந்தக் கழுதை கனைக்கிற மாதிரி நீயும் அவளிடம் போய் ஆடிப் பாடி சிரித்துப் பேசிப் பழக வேண்டும்! இதை

நான் உனக்குச் சொல்லியா தெரிய வேண்டும்? இந்தக் காலத்துப் பெண்கள் இந்த விஷயங்களில் மிகவும் கைதேர்ந்தவர்களாய் இருக்கிறார்கள்! நீ மட்டும் விதிவிலக்கு!

[போகிறார்கள்]

(திரை)

---

## காட்சி : 23 மிராசுதார் வீடு

[புஷ்பா தனியே தையல் வேலை செய்து கொண்டிருக்கிறாள். வெளியே சென்றிருந்த மிராசுதார் வீட்டிற்கு வருகிறார். புஷ்பா இருந்த அறையின் வாசலில் அவளைப் பார்த்தபடியே நிற்கிறார். அவருடைய கண்கள் அவருடைய தீய உள்ளத்தைப் பிரதிபலிக்கின்றன. முகம் விகாரமடைகிறது. மெதுவாகப் புஷ்பாவின் பக்கம் வருகிறார். காலடிச் சத்தம் கேட்டு புஷ்பா எழுந்து நிற்கிறாள்]

**மிராசுதார் :** புஷ்பா! என்ன செய்து கொண்டிருக்கிறாய்?

**புஷ்பா :** சோபா மெத்தை உறைக்குப் பூப்போட்டுக் கொண்டிருக்கிறேன்.

**மிராசுதார் :** எங்கே பார்ப்போம்! (கையில் வாங்கிப் பார்க்கிறார்)... மிகவும் அழகாய் இருக்கிறது!

**புஷ்பா :** நாற்காலி மெத்தைக்கும் பூப் போடும்படி மோகனா அக்கா சொல்லியிருக்கிறாள்.

**மிராசுதார் :** உன் அம்மா எங்கே?

**புஷ்பா :** பெரிய அம்மாவுடன் கோவிலுக்குப் [போயிருக்கிறாள்.

**மிராசுதார் :** மோகனா?

**புஷ்பா :** மோகனாவும் அவர்களுடன் தான் போயிருக் [கிறாள்.

**மிராசுதார் :** நீ ஏன் போகவில்லை?

**புஷ்பா :** எனக்குக் கொஞ்சம் தலை வலித்தது. அம்மா வீட்டில் இருக்கச் சொல்லிவிட்டாள்......... தங்களுக்குக் காப்பி கொண்டு வரட்டுமா?

மிராசுதார்: சரி! கொண்டு வா.

[புஷ்பா உள்ளறைக்குள் போகிருள். மிராசுதார் அவளைப் பார்த்துக்கொண்டு நிற்கிருர். புஷ்பா வருகிருள்]

புஷ்பா! கோவிலில் இன்று என்ன விசேஷம்?

புஷ்பா: எனக்குத் தெரியாது!

மிராசுதார்: [காப்பியைக் குடித்து விட்டு, கோட்டுப் பையிலிருந்து ஒரு பொட்டலத்தை எடுக்கிருர்]

புஷ்பா! உனக்கும் மோகனுவுக்கும் தோடு, வளையல்கள் சங்கிலிகள் கொண்டு வந்திருக்கிறேன். இதோ பார்!

[புஷ்பா அவைகளை ஆவலுடன் கையில் வாங்கிப் பார்க்கிருள். மிராசுதார் அவள் பக்கத்தில் நெருங்கிச் செல்லுகிருர்]

உனக்குப் பிடித்திருக்கிறதா?

புஷ்பா: மிகவும் அழகாக இருக்கின்றன. மோகனு அக்கா வருகிருளா என்று பார்க்கட்டுமா!

[போகப் போகிருள். ஆனல் மிராசுதார் அவள் கையைப் பிடித்து நிறுத்தி விடுகிருர்]

மிராசுதார்: அவள் வருவாள்! அவசரமில்லை. இதோ பார்! இந்தத் தோடுகளை உன் காதுகளில் போட்டுப் பார். (அவைகளைப் பெற்றுக் காதுகளில் போட்டுக் கொள்ளுகிருள்) இந்த சங்கிலியையும் போட்டுக்கொள்.

[மிராசுதாரே அதை அவள் கழுத்தில் போடுகிருர். மிராசு தாரின் கரங்கள் மிகவும் நடுங்குகின்றன. புஷ்பாவும் உணர்ச்சியில் ஈடுபடுகின்ருள். மிராசுதாரின் குரல் தடுமாறுகிறது]

புஷ்பா! நீ மிகவும் அழகாய் இருக்கிருய், புஷ்பா! (அவளுடைய நாடியைப் பிடித்து அசைத்துவிட்டுக் கன்னத்தைக் கிள்ளுகிருர்)

புஷ்பா! இவைகள் உனக்குப் பிடித்தனதானே! உனக்கு வேறு எதுவேண்டுமானுலும் தருகிறேன், புஷ்பா!

[தன் கரங்களால் அவளைத் தழுவுகிறார். புஷ்பா தன் கற்பை இழக்கிறாள். மிராசுதார் நடுக்கத்துடன் தன் அறைக்குப் போய் விடுகிறார். கற்பை இழந்த புஷ்பா விம்மி விம்மி அழுகிறாள். அழுது என்ன பயன்? திடீரென்று அவ்வறையை விட்டு கொல்லைப் புறத்தை நோக்கி அலங்கோலமாகச் செல்லுகிறாள். அங்குள்ள கிணற்றில் குதித்து விடுகிறாள். அப்பொழுதுதான் 'டென்னிஸ்' மட்டையுடன் வீட்டிற்குள் நுழைகிறான் சேகர். சத்தம் கேட்டு கிணற்றின் பக்கம் ஓடுகிறான். புஷ்பாவைக் காப்பாற்றுகிறான். தன் கரங்களில் புஷ்பாவைத் தூக்கிக்கொண்டு வீட்டிற்குள் வருகிறான். மிராசுதாரும் அங்கு வருகிறார்]

**சேகர்:** அப்பா! என்ன நடந்தது?

**மிராசுதார்:** எனக்கும் ஒன்றும் தெரியாது... நான் பத்திரிகை படித்துக் கொண்டிருந்தேன். திடீரென்று கிணற்றில் ஏதோ விழும் சத்தம் கேட்டது.

**சேகர்:** பாவம்! நல்ல வேளையாக நான் வந்தேன்.

[மோகனு, கமலா, சரஸ்வதி வருகிறார்கள்]

அம்மா! புஷ்பா கிணற்றில் விழுந்து விட்டாள்.

**கமலா:** புஷ்பா! புஷ்பா! (அழுகிறாள்)

**சரஸ்வதி:** நான் எத்தனையோ தடவை அவளை எச்சரித்திருக்கிறேன். தண்ணீர் எடுக்கும்போது கவனமாய் இருக்க வேண்டாமா?

**மிராசுதார்:** (முனிசாமியைப் பார்த்து) போய் டாக்டரை அழைத்துக்கொண்டு வா.

[முனிசாமி போகிறான்]

**கமலா:** புஷ்பா! இப்படி உன்னைப் பறி கொடுக்கவா நான் இவ்வளவு நாட்களாக அரும்பாடு பட்டேன்?

[புஷ்பா கண்களைத் திறக்கிறாள்]

**புஷ்பா:** அம்மா! அழாதே அம்மா! எனக்கு ஒன்றுமில்லை.

**மிராசுதார்:** கமலா! நீ அப்புறம் போ. இதோ டாக்டர் வருகிறார்.

[டாக்டர் வருகிறார். புஷ்பாவைச் சோதித்துப் பார்க்கிறார்]

**சேகர் :** என்ன, ஸார்! எப்படி இருக்கிறது?

**டாக்டர் :** 'நாட் சீரியஸ்! இன்னுங் கொஞ்ச நேரத்தில் யாவும் சரியாய்ப் போய்விடும். அடி ஒன்றுமில்லை. பெரிய அதிர்ச்சி ஏற்பட்டிருக்கிறது.

**சேகர் :** டாக்டர், ஸார்! வேறு ஒன்றுமில்லையே?

**டாக்டர் :** 'நதிங்', மிஸ்டர் சேகர்!

**சேகர் :** எதற்கும் இன்னொரு முறை வந்து பார்த்தால் நல்லது.

**டாக்டர் :** அவசியமில்லை. இருந்தபோதிலும் வருகிறேன்.

**சேகர் :** 'தாங்ஸ்', ஸார்!

[டாக்டர் போகிறார்]

(திரை)

---

## காட்சி : 24 — மிராசுதார் வீடு

[மிராசுதார் அறையில் ஆழ்ந்த யோசனையில் அங்குமிங்கும் உலாவிக் கொண்டிருக்கிறார். பொன்னம்பலம் அங்கு வருகிறார்]

**மிராசுதார் :** வா, பொன்னம்பலம்!

**பொன்னம்பலம் :** சேகர் என்றைக்குப் பட்டணம் போகிறான்?

**மிராசுதார் :** நாளைக்குச் சாயந்திர மெயிலில்.

**பொன்னம்பலம் :** அப்படியா? எல்லாம் அவன் செயல்! சேகர் உயர்ந்த பதவிக்கு வரவேண்டும்.

**மிராசுதார் :** என்ன, பொன்னம்பலம்! சென்னைக்குப் போய் விஷயத்தைக் கலந்தாயா?

**பொன்னம்பலம் :** ஆம்!

**மிராசுதார் :** பெண்ணின் தகப்பனார் என்ன சொன்னார்?

பொன்னம்பலம் : அவருடைய மனைவிக்குக் கொஞ்சம் சுகமில்லையாம். ஆகவே கல்யாணப் பேச்சை இன்னும் ஒரு மாதம் தள்ளிப்போட வேண்டியதுதான்.

மிராசுதார் : அதைப் பற்றி என்ன அவசரம்! அந்த இடம் இல்லாவிட்டால் இன்னொரு இடம். சேகருக்குப் பெண்ணு கிடைக்காது! இப்பொழுதே 'நீ, நான்' என்று பெண் கொடுப்பதற்கு அடிபிடி சண்டை போடுகிறார்கள் பெண்களின் பெற்றோர்கள்!

பொன்னம்பலம் : ஆனால் நாம் இந்த இடத்தை விட்டு விடக்கூடாது. நல்ல பசையுள்ள இடம்! மேலும் பெண் மிகவும் அழகாய் இருக்கிறாள்!

மிராசுதார் : நீ பார்த்தாயா?

பொன்னம்பலம் : இந்த இரண்டு கண்களால்தான் பார்த்தேன்! உச்சி முதல் உள்ளங்கால் வரை வைரமாய் அடுக்கியிருக்கிறாள்! நான் அங்கு போன சமயம் அந்தப் பெண் காலேஜ் போகவில்லை. அதற்கு முந்தின நாள் சில காவாலிப் பையன்கள் அவளை என்னமோ சொன்னார்களாம்!

மிராசுதார் : சொல்லாமல் என்ன செய்வார்கள்? பட்டணத்தில் ஆணும் பெண்ணும் ஒன்றாய் அலைகிறார்களே!

பொன்னம்பலம் : நான்கு வாலிபர்கள் சேர்ந்து விட்டால் புரளிதான்! பஸ் ஸ்டாண்டுகளிலும், ரயில்வே பிளாட்பாரத்திலும், எக்ஸிபிஷன் மைதானங்களிலும் இவர்களுடைய அட்டகாசம் சொல்ல முடியாது!

மிராசுதார் : பொன்னம்பலம்! இதெல்லாம் வாலிபச் சேட்டைகள்!

பொன்னம்பலம் : சில பயல்கள் விசில் அடிப்பதைப் பார்த்திருக்கிறீர்களா? கழுகிற்கு மூக்கு வேர்க்கிற மாதிரி தூரத்தில் காலேஜ் பெண்கள் வரும்போதே இவர்கள் 'அலர்ட்' ஆகி விடுகிறார்கள். அவர்கள் பக்கத்தில் வந்ததும்

சினிமாப் பாட்டுக்களை உளற ஆரம்பித்து விடுகிறார்கள். எவ்வளவு தொந்திரவு செய்கிறார்கள் தெரியுமா?

மிராசுதார்: இவர்கள்தானே நம் நாட்டின் பிற்கால பிரஜைகள்!

பொன்னம்பலம்: இவர்கள் கையில் நாட்டை ஒப்படைத்து விட்டால் நாடு குட்டிச்சுவர் ஆகிவிடும்! இந்த லட்சணத்தில் 'சர்வஜன ஓட்டுரிமை' என்று இருபத்தொரு வயது வந்தவர்களுக்கெல்லாம் ஓட்டுரிமையைக் கொடுத்து விட்டார்கள். என்ன ஆகப் போகிறதோ தெரியவில்லை!

மிராசுதார்: வாலிபர்கள் தங்களுடைய பொறுப்பை உணர வேண்டும். கொஞ்ச நாளைக்கு முன் எங்கேயோ கிரிக்கெட் விளையாட்டு முடிந்ததும் போலீஸ்காரர்களுடன் காலேஜ் மாணவர்கள் சண்டையிட்டார்களாம். இதெல்லாம் எதைக் காண்பிக்கின்றது?

பொன்னம்பலம்: இது மட்டுமா? மாணவர்கள் செய்யும் கூத்தைக் கேளுங்கள். வகுப்பில் ஆசிரியர் ஒரு மாணவனைத் தண்டித்தால் உடனே 'ஸ்டிரைக்' செய்ய ஆரம்பித்து விடுகிறார்கள்! விடுதியில் சாப்பாடு கொஞ்சம் ருசியாய் இல்லாவிட்டால் 'ஸ்டிரைக்'!! பரீக்ஷையில் வினாக்களுக்கு விடை தெரியாவிட்டால் 'ஸ்டிரைக்'!!! 'ஸ்டிரைக்' அவர்களுடன் பிறந்த வியாதியாகப் போய் விட்டது!

மிராசுதார்: வியாதிக்கு மருந்து கொடுத்துக் குணமாக்க வேண்டியது பொறுப்புள்ள பதவிகள் வகிக்கும் அறிஞர்களின் கடமை. 'உரிமை' வேண்டும் என்பவர்கள் தங்களின் கடமை என்னவென்பதை மறந்து போகிறார்கள்!

பொன்னம்பலம்: அந்தப் பெண்ணின் அப்பா மிகவும் ஆறுதல் சொன்ன பின்தான் அவள் கல்லூரிக்குச் சென்றாள்.

மிராசுதார்: பொன்னம்பலம்! எவனும் அடுத்த பெண்களைத் தன் தாய் போலவும் சகோதரி போலவும் கருத வேண்டும். இல்லாவிட்டால் சமூகம் பாழடைந்து நசித்துப் போகும்!

பொன்னம்பலம்: இவ்விஷயம் தங்களைப் போன்ற அறிவாளிகளுக்குத்தான் தெரியும்! பாமரர்களுக்கு எப்படித் தெரியும்?

மிராசுதார்: தெரியும்படிச் செய்தல் வேண்டும். பெண்களை அவமானப்படுத்தும் பேர்களைச் சித்திரவதை செய்து கொல்ல வேண்டும்.

பொன்னம்பலம்: அதுதான் மிகவும் குறைந்த தண்டனை!

[போகிறார்]

(திரை)

---

**காட்சி: 25** **சேகரின் அறை**

[சேகரின் அறையிலுள்ள மேஜை, நாற்காலிகள் மீதுள்ள தூசியைப் புஷ்பா துடைத்துக் கொண்டிருக்கிறாள். சரஸ்வதி அங்கு வருகிறாள்].

சரஸ்வதி: [ஒரு நாற்காலியைச் சுட்டிக் காட்டிக்கொண்டு] நீ துடைத்த லட்சணம் இதுதானா? சோம்பேறிக் கழுதை! மூதேவி! இங்கே வந்து பார்! (முரட்டுத்தனமாகப் புஷ்பாவின் கையைப் பிடித்து இழுக்கிறாள்)

புஷ்பா: சரி, அம்மா! இனிமேல் சரியாய்க் கவனித்துச் செய்கிறேன். மன்னியுங்கள்.

சரஸ்வதி: பேச்சுக்குக் குறைவில்லை கழுதைகளுக்கு! எப்போது பார்த்தாலும் அவன் அறையிலே காத்துக் கிடக்கிறாயே?

புஷ்பா: இல்லை, அம்மா!

சரஸ்வதி: சொல்லே! கன்னத்தில் ஒரு இடி இடிக்கிருள்.

புஷ்பா: அம்மா! நான்...

சரஸ்வதி: இனிமேல் அவன் அறைப் பக்கம் போகக் கண்டேன், உன்னை வீட்டை விட்டு துரத்தி விடுவேன்! (ஒரு தள்ளு தள்ளுகிருள்) நாய்களுக்குத் தின்று கொழுப்பேறி விட்டது! அட்டையைப் பிடித்துத் தொட்டிலில் போட்டால் கிடக்குமா?

[மோகன வருகிருள்]

புஷ்பா: அம்மா சேகர்தான் புத்தகங்களை ஒழுங்காக அடுக்கிவைக்கச் சொன்னுர்கள்.

மோகன: காண்டாமிருகம்: அத்தான் பெயரைச் சொல்ல என்ன தைரியம் உனக்கு! சேகர், உன் வீட்டு வேலேக்காரன் என்று நினைத்தாயோ? (தலே மயிரைப் பிடித்து ஆட்டுகிருள்)

புஷ்பா: அக்கா! என்னை அடிக்காதீர்கள்! நான் இனிமேல் ஒரு தப்பிதமும் செய்ய மாட்டேன்.

மோகன: அக்கா! உன் கூடப் பிறந்தவளா நான்? எங்கேயோ இருந்து வந்த எச்சில் பொறுக்கி நாய்க்கு அக்கா!

புஷ்பா: என் பிழையைப் பொறுத்துக் கொள்ளுங்கள்.

மோகன: வயது வந்த பெண் அடக்கம் ஒடுக்கமாக இருக்க வேண்டும். வாழ்கிற வீட்டில் தாசி மாதிரி சதுர் ஆடுகிருயே! (கன்னத்தில் இடிக்கிருள்)

புஷ்பா: அக்கா! நானும் உன்னைப்போல் ஒரு பெண் தானே! குற்றம் இருந்தால் மன்னிக்கக் கூடாதா? (அவள் கைகளைப் பிடிக்கிருள்)

மோகன: என்னைத் தொடாதே பிசாசே! போய் வேலேயைப் பார். (பிடித்துத் தள்ளுகிருள். புஷ்பா கீழே விழுகிருள்)

**சரஸ்வதி:** கழுதை! இனிமேல் குணப்பட்டு விடும். எல்லாம் அவன் கொடுக்கிற உரிமை!

[மோகனும் சரஸ்வதியும் வீட்டிற்குள் போகிருர்கள். புஷ்பா மெதுவாக எழுந்திருந்து உள்ளே போகிருள்]

(திரை)

---

## காட்சி: 26 மிராசுதாரின் வீடு

[ஒரு அறையின் ஜன்னலுக்கு வெளியே பார்த்துக்கொண்டு நிற்கிருள் புஷ்பா. மெதுவாக வந்து சேகர் அவள் தோளில் தன் கையை வைக்கிருன், புஷ்பா திடுக்கிட்டுத் திரும்பிப் பார்க்கிருள். அவ்வறையை விட்டு வெளியே செல்ல முயற்சிக்கிருள். ஆனல் சேகர் அவளைத் தடுத்து விடுகிருன்]

**சேகர்:** புஷ்பா! நான் போய் வரட்டுமா?

**புஷ்பா:** (மௌனம்)......

**சேகர்:** புஷ்பா! ஏன் மௌனஞ் சாதிக்கிருய்? நான் போவதினல் வருத்தப்படுகிருயா?

**புஷ்பா:** ஒன்றுமில்லை!

**சேகர்:** அப்படியானல்......

**புஷ்பா:** தாங்கள் போய் வாருங்கள்.

**சேகர்:** போய் வருகிறேன், புஷ்பா! ஆனல் நான் உன்னை மறக்க மாட்டேன். நாம் இருவரும் மகிழ்ச்சியுடன் வாழும் நாள் வெகு தூரத்திலில்லை.

**புஷ்பா:** தாங்கள்......

**சேகர்:** புஷ்பா! என்ன சொல்ல விரும்புகிருய்?

**புஷ்பா:** தாங்கள் கௌரவமுள்ள குடும்பத்தில் என்னைவிடச் சிறந்த பெண்ணை மணக்க வேண்டுமென்பது தான் என் ஆசை!

**சேகர்:** புஷ்பா! உன் கௌரவத்திற்கு என்ன குறை? உன்னை எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது! அது போதாதா?

புஷ்பா: தங்களுடைய அத்தை மகள்......

சேகர்: புஷ்பா! திரும்பத் திரும்ப இதைத்தானே சொல்லுகிறாய்! இன்னும் இதைச் சொல்லி என் மனதைப் புண்படுத்தாதே!...... புஷ்பா! காதல் பாதை கற்களும் முட்களும் நிறைந்ததென்பார்கள். ஆனால் நம்முடைய காதல் பாதை அப்படியில்லை என்று நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்.

புஷ்பா: (கண்ணீர் வடித்துக்கொண்டு) சேகர்! தாங்கள் மகிழ்ச்சியுடன் சென்னைக்குப் போய் வாருங்கள். ஆனால் இந்தப் பேதை புஷ்பாவை மறந்து விடுங்கள்.

சேகர்: புஷ்பா! மனம் வருந்தாதே! கொடுத்த வாக்கை நான் மீற மாட்டேன். என்னை நம்புகிறாய் அல்லவா?

புஷ்பா: (மௌனம்)

சேகர்: புஷ்பா! நீ கண் கலங்காதே! நான் விரைவில் வந்து விடுவேன். உன்னைத் தவிர வேறு எந்தப் பெண்ணையும் நான் விவாகம் செய்ய மாட்டேன்... கொஞ்சம் பொறுமையாகவும் தைரியமாகவும் இரு. அம்மாவிடமும் அப்பாவிடமும் உன்னை நன்றாய்க் கவனித்துக் கொள்ளும்படிச் சொல்லிவிட்டுப் போகிறேன். மோகனா உன்னைத் தன் சொந்த சகோதரியைப் போல் பார்த்துக் கொள்வாள். போய் வரட்டுமா?

[சேகர் அவள் பக்கத்தில் போகிறான். புஷபா தன் கையால் அவன் பக்கத்தில் வருவதைத் தடுக்கிறாள்]

புஷ்பா: போய் வாருங்கள்! ஆண்டவனின் அருள் உங்களுடன் இருக்கும்...... நீதியின் இருப்பிடத்தில் நிலை பெற்றிருங்கள்! திக்கற்றவர்களைத் தேற்றுங்கள்! அநாதைகளுக்கு ஆதரவளியுங்கள்! கண்ணீர் விடும் மக்களுக்குக்

கருணையைக் காட்டுங்கள்! அபலைகளை ஆதரியுங்கள் (அவள் கன்னங்களில் கண்ணீர் வழிந்தோடுகிறது)

சேகர்: (உணர்ச்சி மிகுந்தவனாய்) புஷ்பா!...

[போகிறான்]

(திரை)

---

## காட்சி: 27 மிராசுதார் வீடு

[சேகர் நீதிபதி வேலையை ஏற்றுக்கொள்ளப் புறப்படுகிறான். மிராசுதார், சரஸ்வதி, மோகனா, கமலா, புஷ்பா எல்லோரும் ஒரு அறையில் நின்று கொண்டிருக்கிறார்கள்]

மிராசுதார்: தம்பி! போய்ச் சேர்ந்ததும் கடிதம் போடு.

சரஸ்வதி: உடம்பை நன்றாய்க் கவனித்துக் கொள். சாப்பாட்டு வசதிகளைப் பார்த்துக்கொள்.

மோகனா: அத்தான்! சென்னையிலேயே முகாம் போட்டு விடாதீர்கள். எங்களையும் அடிக்கடிப் பார்க்க வாருங்கள்!

சேகர்: வருகிறேன், மோகனா! புஷ்பாவும் நீயும் சண்டை போடாமல் இருக்க வேண்டும், தெரிகிறதா?

மிராசுதார்: அடே, முனிசாமி! இந்தப் பெட்டி, படுக்கை எல்லாம் எடுத்துக்கொண்டு போய் வண்டியில் வை.

[முனிசாமி அவைகளை எடுத்துக்கொண்டு செல்லுகிறான். சேகர் எல்லோருக்கும் வணக்கம் செய்கிறான். புஷ்பாவை ஒரு பார்வை பார்த்து விட்டு பங்களாவை விட்டு வெளியேறுகிறான்]

(திரை)

**காட்சி: 28** **தோட்டம்**

[புஷ்பா தன் தாயிடம் மிராசுதார் தன்னைக் கெடுத்துவிட்டார் என்ற திடுக்கிடும் விஷயத்தைக் கூற வருகிறாள்]

**கமலா:** என்னடி முகத்தைத் தொங்க விட்டுக் கொண்டிருக்கிறாய்?

**புஷ்பா:** அம்மா!

**கமலா:** என்னடி?

**புஷ்பா:** அம்மா, நான்......

**கமலா:** சொல்ல வேண்டியதைச் சொல்லித் தொலை.

**புஷ்பா:** (கண்ணீர் வடிக்கிறாள்) அம்மா...என்னை... ஒருவர்......

**கமலா:** (ஆத்திரத்துடன்) என்ன?

**புஷ்பா:** ஒருவர் கெடு...த்து...விட்டார்.

**கமலா:** அடி, சண்டாளி! என் குடியைக் கெடுத்து விட்டாயே! பணக்காரரின் நட்பு வேண்டாம், வேண்டாம் என்று நான் சொன்னேன் அல்லவா? சேகருடன் நெருங்கிப் பழகாதே என்று கிளிப் பிள்ளைக்குச் சொன்ன மாதிரி சொன்னேனே! இப்போது என் வயிற்றில் ஆறாப் பெரும் நெருப்பைக் கட்டி விட்டாயே!

**புஷ்பா:** சேகர் மீது எவ்வித குற்றமுமில்லை, அம்மா!

**கமலா:** குற்றமில்லை! சொந்த சகோதரி போன்ற உன்னைக் கெடுக்கத் துணிந்தானே படித்த முட்டாள்!

**புஷ்பா:** அம்மா! இப்பழியைச் செய்தவர் அவர் அல்ல.

**கமலா:** அடி, நீலி! வேறு யாரடி?

**புஷ்பா:** சேகரின் அப்...பா! (முகத்தைக் கைகளால் மறைக்கிறாள்)

**கமலா:** என்ன! மிராசுதாரா? அந்தச் சண்டாளனா? (தலையில் கையால் அறைந்து கொள்ளுகிறாள்) புஷ்பா!

இந்த நச்சுப் பாம்புக்கு நீயும் பலியாகி விட்டாயா? (மூர்ச்சையாகிக் கீழே விழுகிறாள். புஷ்பா புழுவாய்த் துடிக்கிறாள். மூர்ச்சை தெளிந்த பின்)

புஷ்பா! இந்தச் சண்டாளன் உன்னைக் கெடுத்து விட்டான் என்று நினைக்கும்போது என் குலை நடுங்குகிறதே! வேறு யாரும் இப்பழியைச் செய்திருந்தால் என் மனதை ஒருவாறு தேற்றிக் கொள்வேனே!...... பாதகன்! பழி செய்வதற்கென்றே பாரில் பிறந்திருக்கிறானே! (தாமதம்) புஷ்பா! பதினேழு வருஷங்களுக்கு முன் நடந்த ஒரு பயங்கர சம்பவத்தை நான் உனக்குச் சொல்லத்தான் வேண்டியதிருக்கிறது. (தாமதம்) அப்போது நான் விதவை. ...என் கணவர் இறந்து இரண்டு வருஷங்கள் கழிந்திருந்தன. திக்கற்ற அபலையானேன். என்னைக் காப்பாற்றுவார் யாருமின்றிக் கண் கலங்கினேன். மனித உருவத்தில் இருந்த இந்த மிராசுதார் மிருகத்திடம் அடைக்கலம் புகுந்தேன். அவனுக்கு அப்பொழுதுதான் விவாகமாகியிருந்தது. அவனுடைய மனைவி சரஸ்வதி என் மீது இரக்கங்கொண்டு, அவளுக்குத் துணையாக என்னை ஏற்றுக் கொண்டாள். மிராசுதாரை என் கண்கண்ட தெய்வமாகக் கருதினேன். (தாமதம்). வருஷம் ஒன்று சென்றது. சரஸ்வதி பிரசவத்திற்காகத் தன் தாய் வீட்டிற்குப் போய் விட்டாள். அப்பொழுதுங் கூட நான் மிராசுதார் வீட்டிலேயே இருந்து வந்தேன்... (தாமதம்) ஒரு நாள்! அந்த நாளை நினைக்கும்போது என் உடல் நடுங்குகின்றது. அன்று நடந்த சம்பவத்தை நினைக்க நான் வெட்கமடைகிறேன். (தாமதம்) நான் தன்னந்தனியாய் இருந்தேன். மிராசுதார் என் அறைக்கு வந்தார். அவருடைய மோக வலையில் நான் சிக்கினேன். நான் தவறி விட்டேன், புஷ்பா! அந்த மிருகம் என்னைத் தன் காம இச்சைக்குப் பலியாக்கி விட்டான்.

புஷ்பா! உன் அம்மா விபசாரியானுள்! என் பாவத்தின் விளைவாகப் பிறந்தவள்தான் நீ!... புஷ்பா! நீ மிராசுதாரின் மகள்! அவன்—இந்தக் காமாந்தகாரன்—உனக்குத் தந்தை... (கண்ணீர் விடுகிருள்)

புஷ்பா: என்ன, மிராசுதாரா? எனக்கு உயிர் கொடுத்தவரா என் வாழ்க்கைக்கு உலை வைத்து விட்டார்? கொடுமையிலும் கொடுமை! ஆ, தெய்வமே! (மூர்ச்சை யடைந்து கீழே விழுகிருள். புஷ்பாவின் மீது கமலா தலையை வைத்து விம்மி விம்மி அழுகிருள்)

(திரை)

## காட்சி: 29 — மிராசுதாரின் வீடு

[மிராசுதார் அறையில் உட்கார்ந்திருக்கிருர். புஷ்பாவைக் 'கர, கர' வென்று அவ்வறைக்குள் இழுத்துக்கொண்டு வருகிருள் கமலா. வெறி கொண்டவளாகக் காணப்படுகிருள். புஷ்பாவை மிராசுதாரின் முன் குப்புறத் தள்ளுகிருள். மிராசுதார் திடுக்கிடுகிருர்]

மிராசுதார்: கமலா, என்ன இது? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே!

கமலா: (கோபத்தில்) விளங்காது! பழியைச் செய்து விட்டு பசுப்போல் உட்கார்ந்திருக்கும் பக்தனே! எப்படி உமக்கு விளங்கும்?

மிராசுதார்: கமலா! பதருதே!

கமலா: திக்கற்ற எங்களுக்கு நீங்கள் செய்யும் நீதி இதுதாஞ? இந்த அழியாப் பழியை ஏன் செய்தீர்கள்?

மிராசுதார்! கமலா! ஆத்திரப்படாதே, 'பட, பட' வென்று பேசாதே!

கமலா: நன்ருய் இருக்கிறது கதை! அன்று என்னைக் கெடுத்தீர்கள். இன்று என் அருமைக் கண்மணியைத்

தங்களுடைய மிருக இச்சைக்குப் பலியாக்கி விட்டீர்கள். ஏன்? தங்களுடைய மகளையே மண்ணாக்கி விட்டீர்கள்!... அம்மம்ம! இதென்ன கொடுமை! இப்பாவத்தைச் செய்யத் தாங்கள் எப்படி மனந் துணிந்தீர்கள்?

மிராசுதார்: கமலா! நான் சொல்வதைச் சற்று பொறுமையுடன் கேள்.

கமலா: பொறுமை! என் குடும்பத்தை நிர்மூலமாக்கிய பின் என்ன பொறுமை வேண்டியதிருக்கிறது? வேலியே பயிரை மேய்ந்து விட்டது!

மிராசுதார்: கமலா! நான்......

கமலா: கொடுமை! கொடுமை! என் மீதும் என் மகள் மீதும் விபசாரிப் பட்டத்தைச் சூட்டிய புண்ணியவான் தாங்கள்! (கண்ணீர் வடிக்கிறாள். புஷ்பாவின் கரத்தைப் பிடித்து இழுக்கிறாள். புஷ்பா எழுந்து நிற்கிறாள். தன் கையால் முகத்தை மறைத்துக் கொள்கிறாள்) இவள் தங்கள் மகள் போன்றவள் அல்லவா? நன்றாய்ப் பாருங்கள்! அலங் கோலப் படுத்தப்பட்டு இன்னும் அழிந்து போகாமல் இதோ நிற்பவள் தங்கள் குழந்தையல்லவா?... ஆட்டுக்குட்டியை வளர்த்து அதை அடித்துத் தின்னும் கசாப்புக்கடைக் காரனுடைய உள்ளத்தைக் காட்டிலும் தங்கள் உள்ளம் கொடுமை வாய்ந்தது! இதற்காகத்தானா அநாதை விடுதி யிலிருந்து தங்களின் ஆதரவை நம்பி இவளை இங்கு கொண்டு வந்தேன்!

மிராசுதார்: கமலா! புஷ்பாவின் கருவில் இருக்கும் குழந்தையைக் கொன்று விடலாம்.

கமலா: ஆ! என்ன சொன்னீர்கள்! அதைக் கொன்று விடவா? விபசாரம்! கொலை!! என்ன, பேயாக மாறி விட்டீர்களே!

மிராசுதார்: புஷ்பாவை விரைவில் யாருக்காவது மணஞ் செய்து கொடுத்து விடலாம். கமலா! என்னைக் காப்பாற்று. (அவளுடைய காலைப் பிடிக்கிறார்) என் மனைவிக்குத் தெரிந்தால் வீட்டில் பெரிய பழி வந்து நேரிடும். கமலா! கமலா!

கமலா: என்னை விட்டு விடுங்கள். வீரம், ஈகை, இரக்கம் காட்ட வேண்டிய ஆடவர்கள் பாவம் பழிகள் செய்யத் துணிந்து விட்டால், பெண்கள் உலகில் எப்படி வாழ முடியும்? (பக்கத்திலுள்ள மேசை மீதிருந்த கத்தியை எடுத்துக் கொண்டு) இதோ! இக்கத்தியால் எங்கள் இருவரையும் மாய்த்து விடுங்கள். உங்களுக்குக் கோடி புண்ணியம் உண்டு.

[மிராசுதார் நடுங்கிய கரங்களுடன் அக்கத்தியைப் பிடுங்கிக் கீழே வீசுகிறார். கொஞ்சம் பணத்தை அவளிடம் கொடுக்கக் கையை நீட்டுகிறார்)

மிராசுதார்: கமலா! இதை வைத்துக்கொள். விரைவில்......

கமலா: விபசாரிப் பட்டத்தைச் சூட்டி விட்டு விளையாடவா செய்கிறீர்கள்? மானின் துயரம் வேடனுக்கு எப்படித் தெரியும்? (பணத்தைப் பெற்றுக்கொண்டு அவர் முகத்தில் வீசுகிறாள்) பணம்! மனிதர்களைப் பாவ வழியில் இழுத்துச் செல்லும் பேய்! பணக்காரர்கள்! மோசக்காரர்கள்! பெண்களைத் தங்களுடைய இன்ப வாழ்க்கையின் கருவிகளாக்க நினைக்கும் வெறியர்கள்!!

மிராசுதார்: நானும் பார்த்துக் கொண்டிருக்கிறேன், ஒரேயடியாக வார்த்தைகளை அடுக்கிக்கொண்டு போகிறாயே! நிறுத்து உன் பிதற்றுதலை!

கமலா: பிதற்றுதல்! இப்பொழுது சொல்லத்தானே செய்வீர்கள்? அன்று தங்களுடைய மானத்தைக் காப்பாற்ற

மௌனம் சாதித்தேன் அல்லவா? பெரிய மனிதனைச் சிறுமைப்படுத்தக் கூடாதென்று நினைத்தேன் அல்லவா? அன்று என் காலில் விழுந்து கெஞ்சினீர்களே, அப்பொழு தல்லவா இப்படிப் பேசியிருக்க வேண்டும்?

மிராசுதார்: சீ, நாயே! வார்த்தையை நிறுத்து.

கமலா: அட, நீசனே! நீ ஒரு ஆடவனா? காம நோய் பிடித்த காதகா? எங்கள் வாழ்க்கையை அலங்கோலப் படுத்திய அசுரனே!

மிராசுதார்: விபசாரி! என் வீட்டை விட்டு வெளியே போ!

கமலா: நான் விபசாரிதான்! என் மகள் விபசாரிதான்!! போகத்தான் போகிறோம்! இது வீடா? விபசார விடுதி!

[சரஸ்வதியும் மோகனும் வருகிறார்கள்]

மிராசுதார்: வாயை மூடு. அதிகம் பேசினால் உன் நாவைத் துண்டித்து விடுவேன். என்னமோ பெரிய காரியம் நடந்துவிட்ட மாதிரி கன்னா பின்னா வென்று பேசுகிறாயே?

சரஸ்வதி: நான்தான் அன்றைக்கே சொன்னேனே இந்த மூதேவிகளை, வைத்திருந்தால் வீடு கெட்டுப் போய் விடுமென்று! அவர்கள் குலுக்கும் மினுக்கும்......!

மோகன: எனக்கு முன்னமே தெரியும்! இந்தப் புஷ்பா இருக்கிறாளே! பெரிய மாயாஜால வித்தைக்காரி! அத்தானை அப்படியே கைக்குள் போடப் பார்த்தாள்! அவளுடைய நடையும், உடையும்...

கமலா: அடுக்குங்கள் உங்கள் வசை மொழிகளை! விபசாரிப் பட்டத்தைச் சூட்டிவிட்டு வேதாந்தமா பேசுகிறீர்கள்? பேசுங்கள்! நன்றாய்ப் பேசுங்கள்!!

சரஸ்வதி: சீ, நாயே! நாவை அடக்கிப் பேசு. வாழ்கிற வீட்டில் இந்தப் பேச்சா?

மிராசுதார்: அடே, முனிசாமி! இந்தக் கோவேறிக் கழுதைகளைப் பிடரியைப் பிடித்து வெளியே தள்ளு!

கமலா: தள்ளுங்கள்! ஆனால் தெய்வம் ஒன்று இருப்பதை மறந்துவிட வேண்டாம்! ஏழைகளின் கண்ணீர் கூரிய வாளுக்குச் சமம்! அன்று நான் வடித்த கண்ணீர்! இன்று என் மகள் வடிக்கும் கண்ணீர்! எங்களின் இரத்தக் கண்ணீர் உம்முடைய வாழ்வை அழிக்கும்! நீர் செய்த பாவச் செயல் உம்மைச் சுற்றி நின்று ஓலமிடும்! என் மகள் வாழ்வழிந்தது போல் உம் வாழ்வு அழியும் காலம் வந்தே தீரும்!

மிராசுதார்: நரிகள்! ஊளையிடாதீர்கள். வெளியேறுங்கள். (கமலாவைப் பிடித்துத் தள்ளுகிறார்)

மோகனு: இவள் பெரிய கண்ணகி! நம் வீட்டையே சாம்பலாக்கி விடுவாள்! (புஷ்பாவைப் பார்த்து) இவள் பெரிய நீலி! இவள் லட்சணத்திற்குத் தங்கச் சங்கிலி வேறு. (புஷ்பாவின் கழுத்திலுள்ள சங்கிலியை அறுக்கிறாள் கமலாவும் புஷ்பாவும், போகிறார்கள்)

(திரை)

---

## காட்சி: 30 மிராசுதார் வீடு

[மிராசுதார் ஆழ்ந்த யோசனையில் அங்கு மிங்கும் உலாவிக் கொண்டிருக்கிறார்]

மிராசுதார்: அடே, முனிசாமி!

[முனிசாமி வருகிறான்]

முனிசாமி: எசமான்!

மிராசுதார்: போய், நான் சொன்னேன் என்று கறுப்பனை உடனே அழைத்துக்கொண்டு வா.

முனிசாமி: எந்தக் கறுப்பனை, சாமி?

மிராசுதார்: ஜெயிலுக்குப் போய்விட்டு வந்திருக்கிறானே, அவனைத்தான்!

முனிசாமி: அவன் பேரு பழிவாங்கிக் கறுப்பன் சாமி!

மிராசுதார்: போடா, மடையா! உடனே கையோடு, அழைத்துக்கொண்டு வா.

[முனிசாமி போகிறான்]

மிராசுதார்: (தனி மொழி) இந்த விபசார நாய்களை இப்படியே உயிருடன் விட்டு விட்டால் நம் பெயரைக் கெடுத்து விடுவார்கள். பிறகு முகத்தை வெளியே காட்ட முடியாது!

[மறுபடியும் அங்குமிங்கும் உலாவுகிறார். கதவைத் தட்டும் சத்தம், மிராசுதார் கதவைத் திறக்கிறார். கறுப்பன் நுழைகிறான்]

கறுப்பன்: கும்பிடுறேங்க சாமி!

மிராசுதார்: இங்கே பக்கத்தில் வா.

[கறுப்பன் பக்கத்தில் போகிறான், மிராசுதார் அவன் காதுகளில் 'குசு, குசு' வென்று பேசுகிறார். அவன் கையில் ஒரு கட்டு ரூபாய் நோட்டுகளைக் கொடுக்கிறார்]

கழுதைகளை நல்ல சமயம் பார்த்துத் தீர்த்து விடு காரியம் முடிந்ததும் என்னிடம் வா. இன்னும் கொஞ்சம் பணம் தருகிறேன். இதைப் பற்றி யாரிடமும் சொல்லக் கூடாது.

கறுப்பன்: சொல்ல மாட்டேன், சாமீ! அடிமையின் வாய் எப்போதும் மூடியிருக்கும்.

மிராசுதார்: சரி! போ! காரியத்தை வெற்றியுடன் முடித்து விடு.

கறுப்பன்: சாமி! போரேன். (கும்பிட்டுவிட்டுப் போகிறான்)

மிராசுதார்: [தனி மொழி]

அவர்கள் சாக வேண்டியதுதான்! உயிரோடு இருந்தால் சமூகமே கெட்டுவிடும்! கெஞ்சினல் மிஞ்சுகிறது நாய்கள்!

(திரை)

---

## காட்சி: 31 கானகம்

[கமலாவும் புஷ்பாவும் சோகம் படர்ந்த முகத்துடன் ஒரு காட்டின் வழியே செல்லுகிறார்கள். அவர்களுக்குப் பின்னல் கறுப்பன் கையில் தடியுடன் பதுங்கிச் செல்லுகிறான். பக்கத்தில் சென்றதும் கமலாவின் தலையிலும் புஷ்பாவின் தலையிலும் ஓங்கி அடிக்கிறான். 'தெய்வமே!' என்று கதறிக்கொண்டு கமலா கீழே விழுகிறாள். "கொலை! கொலை!" என்று புஷ்பா அலறுகிறாள். சில வழிப்போக்கர்கள் அங்கு ஓடி வருகிறார்கள். மூர்ச்சையுற்றிருக்கும் கமலாவின் பக்கத்தில் புஷ்பா அழுது கொண்டிருக்கிறாள். முகத்தில் ரத்தம் வழிந்தோடுகிறது]

ஒரு வழிப்போக்கன்: என்னம்மா இது?

புஷ்பா: ஒரு பாவி என் அம்மாவைத் தலையில் அடித்து விட்டு இந்த வழியே ஓடிப் போய் விட்டான்.

மற்றொரு வழிப்போக்கன்: ஐயோ, பாவம்! சண்டாளன்!

ஒரு வழிப்போக்கன்: 'பெண் என்றால் பேயும் இரங்கும்' என்பார்கள். இந்தப் பாவி பேயைக் காட்டிலும் கொடியவனாய் இருக்க வேண்டும்!

மற்றொரு வழிப்போக்கன்: இப்பேர்ப்பட்டவர்களைத் தெய்வம் ஒரு போதும் சும்மா விடாது!

ஒரு வழிப்போக்கன்: 'தெய்வம், தெய்வம்' என்று சொல்லித்தான் உலகத்தில் இந்த அநியாயங்கள் எல்லாம் நடக்கின்றன! இந்தக் காலத்தில் தெய்வத்திற்கு எவன் தான் பயப்படுகிறான்!

மற்றொரு வழிப்போக்கன்: இவர்களை உடனே ஆஸ்பத்திரிக்கு எடுத்துச்செல்ல வேண்டும்.

ஒரு வழிப்போக்கன்: ஆமாம்! உயிரைக் காப்பாற்ற வேண்டும்.

புஷ்பா: அம்மா! அம்மா!! நான் என்ன செய்வேன், அம்மா!

(திரை)

---

## காட்சி: 32 தெரு

[மைனர் முத்து கோபத்துடன் பொன்னம்பலத்தின் கழுத்தைப் பிடிக்கிறார்]

மைனர் முத்து: அடே! மடையா! என்னுடைய பணத்தைக் கீழே வைக்கிறாயா? அல்லது உன் பற்களைக் கீழே விழச் செய்யட்டுமா?

பொன்னம்பலம்: மைனர்வாள்! இது என்ன விபரீதம்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே!

மைனர் முத்து: சீக்கிரமே விளங்க வைக்கிறேன்! புஷ்பா எங்கே? அவள் ஊரை விட்டுப் போன விஷயம் உனக்குத் தெரியுமல்லவா?

பொன்னம்பலம்: புஷ்பா ஊரைவிட்டுப் போய் விட்டாளா?

மைனர் முத்து: பாசாங்கு வார்த்தைகளைப் பசப்பாதே? (ஒரு குத்து விடுகிறார்) உள்ளதைச் சொல்.

பொன்னம்பலம்: தெ...ரி...யு...ம்!

மைனர் முத்து: அப்படியானால் என் விஷயம்?

பொன்னம்பலம்: நான் என்ன செய்வேன்? நிலைமை கட்டுக்கடங்காமல் போய் விட்டது. எல்லாம் அவன் செயல்!

மைனர் முத்து: அவன் செயல்!! (இன்னொரு குத்து) பெண் தரகன்! பணம் பறிக்கும் பேய்!! என் பொன்னைப் பறித்த பொன்னம்பலமே உன்னை அம்பலத்திற்குக் கொண்டு வருகிறேன் பார். (மறுபடியும் அடிக்கிறார்)

பொன்னம்பலம்: என்னை அடித்தால் போலீஸில் மாட்டி விடுவேன்.

மைனர் முத்து: என்னை மிரட்டவா பார்க்கிறாய்? இன்னுங் கொஞ்ச நேரத்தில் உன்னை இரும்புக் கம்பிகளை எண்ண வைக்கிறேன், பார்!

பொன்னம்பலம்: அப்படியானால் தாங்களும் என்னுடன் வர வேண்டியதிருக்கும். தங்கள் மேல் கொலைக் குற்றம் சாட்டி விடுவேன்.

மைனர் முத்து: கொலைக் குற்றமா?

பொன்னம்பலம்: ஆம்! புஷ்பாவின் தாயாரை யாரோ கொலை செய்து விட்டார்களாம். நீங்கள் தான் கொன்றீர்கள் என்று போலீஸில் சொல்லி விடுவேன்.

மைனர் முத்து: கொலையா?

பொன்னம்பலம்: நேற்றுத் தாயும் மகளும் மிராசுதார் வீட்டை விட்டு வெளியே போய் விட்டார்கள். இன்று காலையில் கமலா இறந்து கிடந்ததாக பெரும் வதந்தி!

மைனர் முத்து: அப்படியானால்... பொன்னம்பலம்! நீதான் என்னைக் காப்பாற்ற வேண்டும். நீதான் என் கண் கண்ட தெய்வம்!

பொன்னம்பலம்: தாங்கள் புஷ்பாவைப் பற்றியோ, எனக்குப் பணம் கொடுத்ததைப் பற்றியோ யாரிடமும் பேசக்கூடாது. பேசினால் தங்கள் மேல் கொலைக் குற்றம் விழுந்து விடும். வீதியில் போகிற வினையை வீட்டிற்கு அழைக்க வேண்டாம்!

மைனர் முத்து: மிஸ்டர் பொன்னம்பலம்! என்னை மன்னிக்கவும். தங்களுக்குக் கோடி புண்ணியம் உண்டு! இதைப் பற்றி யாரிடமும் சொல்ல வேண்டாம். இதோ, கொஞ்சம் பணம் பெற்றுக்கொள்ளுங்கள். (பணத்தைக்

கொடுத்து விட்டு) நான் போய் வரட்டுமா? நம்முடைய சிநேகம் நீடிக்க வேண்டும். (போகிறார்)

போன்னம்பலம் : இந்தப் பொன்னம்பலத்திடமா பொடிப் பயல் கைவரிசையைக் காண்பிக்கிறான்? பொதிகை மலையை அசைத்தாலும் அசைக்கலாம், ஆனால் இந்தப் பொன்னம்பலத்தை அசைக்க முடியுமா?........ எல்லாம் அவன் செயல்! திருச்சிற்றம்பலம்! இந்தத் தடிப்பயலின் கொடிய குத்துக்களினின்றும் காப்பாற்றினாயே அதுவே போதும்!...... தலை தப்பினது அவன் புண்ணியந்தான்! இன்றோடு இந்த புரோக்கர் வேலையை விட்டுவிட வேண்டியதுதான்! இப்படிப் பிழைப்பதைக் காட்டிலும் பிச்சை எடுத்துப் பிழைக்கலாமே!

[போகிறார்]

(திரை)

---

## காட்சி : 33 ஆஸ்பத்திரி

[ஓர் அறை. நெற்றியில் கட்டுகளுடன் ஒரு கட்டிலில் புஷ்பா படுத்திருக்கிறாள். பக்கத்தில் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஒரு முக்காலியில் உட்கார்ந்திருக்கிறார்]

**இன்ஸ்பெக்டர் :** தங்களின் பெயர்?

**புஷ்பா :** புஷ்பா.

**இன்ஸ்பெக்டர் :** தங்களுடன் காட்டு வழியாக வந்த [அப்பெண் யார்?

**புஷ்பா :** என் அம்மா.

**இன்ஸ்பெக்டர் :** அந்தி நேரத்தில் அக்காட்டின் வழியே எங்கு சென்றீர்கள்?

**புஷ்பா :** எங்கள் வாழ்க்கையின் முடிவை நோக்கி! ஆண்டவன் காட்டிய வழி அதுதான்!

**இன்ஸ்பெக்டர் :** அம்மா! வருந்த வேண்டாம், நடந்ததைச் சொல்லுங்கள்.

புஷ்பா: ஒரு சண்டாளன்! மனித உருவத்தில் உலாவும் பேய்!! எங்கள் வாழ்க்கையில் மண்ணைப் போட்ட அரக்கன்!

இன்ஸ்பெக்டர்: அவன் யாரம்மா?

புஷ்பா: மிராசுதார் சுந்தரம் பிள்ளை!!

இன்ஸ்பெக்டர்: உங்களுக்கும் அவருக்கும் என்ன உறவு?

புஷ்பா: உறவு? என் தாயார் அந்தப் பிசாசின் வீட்டில் வேலை செய்து வந்தாள்.

இன்ஸ்பெக்டர்: உங்களை ஏன் கொலை செய்யத் துணிந்தார்?

புஷ்பா: எங்கள் பொல்லாத காலம்! எங்கள் வாழ்வைக் கெடுத்த பின் எங்களை வீட்டை விட்டு விரட்டினது மல்லாமல் எங்களைத் தொலைக்கவும் வழி தேடி விட்டான்.

இன்ஸ்பெக்டர்: எல்லாம் விளங்குகிறது!... நல்ல வேளையாக நீயாவது தப்பினாய்.

புஷ்பா: அப்படியானால் என் அம்மா?

இன்ஸ்பெக்டர்: நேற்றிரவே இறந்து போய் விட்டாள்

புஷ்பா: ஐயோ! இறந்து விட்டார்களா? தெய்வமே அம்மா! அம்மா!

[கட்டிலிலிருந்து கீழே விழுகிறாள்]

(திரை)

---

## காட்சி: 34 தெரு

[இரண்டு நண்பர்கள் தெருவில் பேசிக்கொண்டு போகிறார்கள்]

கோபால்: ரத்னம்! போலீஸ் ஸ்டேஷன் பக்கத்தில் கூட்டமாய் இருக்கிறதே!

ரத்னம்: எவனோ மிராசுதாராம்! வேலைக்காரியைக் கொலை செய்து விட்டானாம்!

கோபால்: கொலையா? எதற்காகவோ?

ரத்னம்: யாருக்கடா தெரியும்? கடவுளுக்குத்தான் வெளிச்சம்!

கோபால்: இந்தக் காலத்துப் பணக்காரப் பயல்கள் எல்லாம் இப்படித்தான்!

ரத்னம்: இப்படி அநியாயம் நடந்தால் நாட்டில் ஏன் பஞ்சம் வராது? இவர்களுக்குப் பயந்துதான் மழை கூடப் பூமிக்கு வரப் பயப்படுகிறது! ரூபாய்க்கு எத்தனை படி அரிசி என்ற காலம் போய், இப்போது ஒரு படி அரிசி எத்தனை ரூபாய் என்ற காலம் வந்துவிட்டது!...... செத்துப்போன வளின் மகனையும் கொண்டு வந்திருக்கிறார்கள்.

கோபால்: பாவம்! தாயை இழந்தவனுக்கல்லவா தெரியும் வருத்தம்?...... ஆனாலும் பெரிய மிராசுதார் கொலை செய்து விட்டான் என்றால் நப்ப முடியவில்லை!

ரத்னம்: இந்தக் காலத்தில் யாரைத்தான் நம்ப முடிகிறது? தோற்றத்தை நம்பி மோசம் போய் விடுகிறோம். அயோக்கியப் பேர்வழிகள் அழகான ஆடையாபரணங் களால் தங்கள் கள்ளத்தனத்தை மறைத்துக் கொள்ளு கிறார்கள்! கறுப்புச் சந்தைக்காரர்களைத்தான் லக்ஷ்மி தழுவிக்கொள்ளப் பிரியப்படுகிறாள்! பாவிகள் பவிசாக வாழுகிறார்கள்! பரமனின் பக்தர்கள் பசிப் பிணியால் பரிதவிக்கிறார்கள்! அநியாயமாகச் சம்பாதிக்கும் பணத்தில் ஆண்டவனுக்கு ஆலயம் அமைக்கிறார்கள்! ஆனால் உண்ண உணவின்றி, குடியிருக்கக் கூரையின்றி, அணிவதற்கு ஆடை யின்றி அலையும் அபலைகளுக்கு ஆதரவளிப்பவர்கள் அவனியில் யாருமிலர்!!...... அறிவிலி அரச பீடத்தில் அமர்த்தப்படுகிறான்! அறிவாளி ஏளனம் செய்யப்படு கிறான்!! பொய் சொல்லி வாழ்பவன் புகழப்படுகிறான்! உண்மை சொல்பவன் உதாசினம் செய்யப்படுகிறான்!! பார்த்தாயா, இருபதாம் நூற்றாண்டின் மகிமையை! பகுத் தறிவுக் காலம், அப்பா, பகுத்தறிவுக் காலம்!!

கோபால்: ஆனால் கொலை செய்கிறவன் தெய்வ தண்டனைக்குத் தப்பமாட்டான்! அது நிச்சயம்.

ரத்னம்: போடா பைத்தியக்காரா? இந்தக் காலத்தில் தெய்வங்கள்கூட இவர்களைப் பார்த்துப் பயப்படுவது போல் தோன்றுகிறது!

கோபால்: 'அரசன் அன்று கொல்வான்; தெய்வம் நின்று கொல்லும்!' வா, போகலாம்.

[போகிறார்கள்]

(திரை)

---

## காட்சி: 35 மிராசுதார் வீடு

[மிராசுதாரும் பொன்னம்பலமும் ஒரு அறையில் பேசிக் கொண்டிருக்கிறார்கள்.]

பொன்னம்பலம்: என்ன, மிராசுதார்வாள்! வருகிற தேர்தலில் தாங்கள் போட்டி போடப் போவதாகச் சொல்லுகிறார்களே? இது உண்மைதானா?

மிராசுதார்: முற்றிலும் உண்மை! அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் எல்லாம் ஜரூராக நடைபெறுகின்றன.

பொன்னம்பலம்: ஆனால் தங்களுக்கு......

மிராசுதார்: வெற்றி கிடைக்காது என்று சந்தேகப் படுகிறீர்களோ?

பொன்னம்பலம்: ஆமாம்!

மிராசுதார்: ஏன் அப்படி நினைக்கிறீர்கள்?

பொன்னம்பலம்: மிராசுதார்களுக்கும், ஜமீன் தார்களுக்கும், ராஜாக்களுக்கும், பண மூட்டைகளுக்கும் "ஓட்" போடும் காலம் மலையேறி விட்டது!

மிராசுதார்: மலையும் ஏறவில்லை! மரமும் ஏறவில்லை! கொஞ்சம் வெள்ளை அப்பனை வாரி இறைத்து விட்டால் ஓட்டுக்களைப் போட பெட்டியில் இடம் இருக்காது!

பொன்னம்பலம்: அதுதான் இல்லை! ஓட்டுக்களை விலைக்கு வாங்கும் காலம் இதுவல்ல. அது வெள்ளைக் காரர்கள் காலம்! இறந்த காலம்!

மிராசுதார்: ஹஹ்ஹ! நன்ருய்ச் சொன்னீர்கள்! ரொட்டித் துண்டை தின்னுத நாய் உண்டா? நபருக்கு ஒரு ரூபாய் அல்லது இரண்டு ரூபாய் கொடுத்தால் போதும்! ஓட்டுப் போட 'நான், நீ' என்று ஓடியல்லவா வருவார்கள்!

பொன்னம்பலம்: ஆனல் இந்த உணவுப் பஞ்சம், உடைப் பஞ்சம், கள்ளச்சந்தை வியாபாரிகளின் அட்டூழியங்கள் எல்லாம் மக்களுக்கு அதிக நன்மையைச் செய்திருக்கின்றன! அதனுல்தான்......

மிராசுதார்: நன்மையா?

பொன்னம்பலம்: ஆம். இவ்வளவு துன்பப்பட்ட பின் தான் நம் மக்களுடைய மழுங்கிப்போன அறிவு கூர்மை அடைந்திருக்கிறது. ஆகவே பணத்திற்காக மக்கள் இனி மேல் பதவிகளே விற்க மாட்டார்கள். பணம் இருந்தாலும் பட்டினி; இல்லாவிட்டாலும் பட்டினி! அதனுல் சிறந்த அறிவாளிகளேயே தேர்ந்தெடுப்பார்கள்!

மிராசுதார்: என்னுடைய அறிவிற்கும் ஆற்றலுக்கும் என்ன குறை?

பொன்னம்பலம்: அதைப்பற்றி நான் சொல்லவில்லே. மக்களுடைய மனப்பான்மை மாறிவிட்டது என்றுதான் சொல்ல வந்தேன்.

மிராசுதார்: எது எப்படிப் போனுலும் நான் நிற்கத் தீர்மானித்து விட்டேன். ஒரு 'சான்ஸ்' கிடைத்தால் மந்திரி பதவிகூட கிடைத்து விடும்.

பொன்னமபலம்: தாங்கள் மந்திரி ஆனல் எங்களுக்குப் பெரும் மகிழ்ச்சியே!

[பொன்னம்பலம் போகிருர். முனிசாமி வருகிருன்]

முனிசாமி: எசமான்! யாரோ வந்திருக்காங்க!

மிராசுதார்: யாருடா அது?

முனிசாமி: கால்சட்டை, பூட்ஸ், தொப்பி எல்லாம் போட்டிருக்காங்க.

மிராசுதர்: உள்ளே வரச்சொல். இந்தத் தேர்தல் விஷயமாய்த்தான் இருக்கும்!

முனிசாமி: சாமி! ஊருக்குப் புதிசு மாதிரி இருக்கு.

மிராசுதார்: இந்தப் பயல்களுக்கு என்ன வேலே? ஏதாவது 'சங்கம்', அதற்குப் 'பணம்' என்று அம்மானே பாடிக்கொண்டு வருவார்கள் !!

முனிசாமி: எசமான், வரச் சொல்லட்டுமா?

மிராசுதார்: வரச்சொல். வந்து தொலேயட்டும்!

[முனிசாமி போகிருன். இன்ஸ்பெக்டரும் இரண்டு கான்ஸ டபிள்களும் வருகிருர்கள். மிராசுதார் முகத்தில் பயம் காணப்படுகிறது]

வாருங்கள்! உட்காருங்கள்...

இன்ஸ்பெக்டர்: உட்காருவதற்கு நேரமில்லே......

மிராசுதார்: என்ன விஷயம்?

இன்ஸ்பெக்டர்: தங்களே 'அரஸ்ட்' செய்ய 'வாரண்ட்' கொண்டு வந்திருக்கிறேன்.

மிராசுதார்: அரஸ்டா? அட, தெய்வமே! எனக்கு ஒன்றும் விளங்கவில்லேயே!

இன்ஸ்பெக்டர்: எல்லாம் விரைவில் விளங்கி விடும்.

[கைகளில் விலங்கு மாட்டுகிருர் இன்ஸ்பெக்டர்]

மிராசுதார்: நான் என்ன செய்வேன்?... சரஸ்வதி! மோகனு!! பொன்னம்பலம் !!!

[சரஸ்வதியும் மோகனுவும் அங்கு வருகிருர்கள். மிராசுதாரின் நிலேமையைப் பார்த்துக் கண்ணீர் வடிக்கிருர்கள்]

சரஸ்வதி: இதென்ன அநியாயம்?

இன்ஸ்பெக்டர்: அம்மா! இவர் பெரிய குற்றவாளி! கமலா என்ற பெண்ணேயும் அவளுடைய மகள் புஷ்பாவையும் கொலே செய்யும்படி யாரோ தடியன் ஒருவனேத் தூண்டியிருக்கிருர். கமலாவைக் கொன்று விட்டார்கள்!

மிராசுதார்: சரஸ்வதி! அந்த விரியன் பாம்புக்குட்டிகள் என்னே இக்கதிக்குள்ளாக்கி விட்டன. (இன்ஸ்பெக்டரும் மிராசுதாரும் வெளியேறுகிருர்கள். சரஸ்வதி கைகளேப் பிசைந்து கொண்டு நிற்கிருள்)

**சரஸ்வதி:** தெய்வமே! அடே, முனிசாமி! போய், பொன்னம்பலத்தை அழைத்து வா. சேகருக்குத் தந்தி கொடுக்கச் சொல்.

(திரை)

---

## காட்சி: 36 சேகரின் இல்லம்

[சரஸ்வதியும் மோகனுவும் சேகரைச் சந்திக்கிறார்கள்]

**சரஸ்வதி:** சேகர்! (கண்ணீர் விடுகிறாள்)

**மோகனு:** அத்தான்!

**சேகர்:** (மௌனம்)...

**சரஸ்வதி:** சேகர்! அப்பா, எப்படியடா இருக்கிறார்? நீ பார்த்தாயா?

**சேகர்:** யாரைப் பார்க்க வேண்டும்? மிருகமாய் மாறியிருக்கும் மிராசுதாரையா? அப்பா! நல்ல அப்பா வந்தார்கள்!!

**மோகனு:** அத்தான்! மாமாவை வெறுக்காதீர்கள். பாவம், அவர்கள் என்ன செய்வார்கள்?

**சரஸ்வதி:** இந்தப் பெரிய பழியை அவர் தலையில் கட்டி விட்டாளே அந்தச் சண்டாளி!

**சேகர்:** அம்மா, புஷ்பாவைத் தூற்ற வேண்டாம். தாயைப் பறி கொடுத்துத் தவித்துக் கொண்டிருக்கிறாள்.

**சரஸ்வதி:** எல்லாம் அந்த விபசாரியினால் வந்த தல்லவா? அவள் பேச்சைக் கேட்டு அப்பாவை 'அரஸ்ட்' செய்து விட்டார்களே!

**சேகர்:** அவள் பேச்சைக்கேட்டு மாத்திரம் அல்ல. நியாயமும் அது.

**சரஸ்வதி:** நியாயமா?

**சேகர்!** ஆம். அப்பாதான் குற்றவாளி!

**சரஸ்வதி:** என்ன, குற்றவாளியா?

சேகர்: அம்மா! அப்பா பசுவின் தோலைப் போர்த்த ஓநாய் போலல்லவா இருந்திருக்கிறார்! அவருடைய நடத்தை மிகவும் கேவலமானது. புஷ்பாவின் கற்பைக் கெடுத்து விட்டார்.

சரஸ்வதி: என்னடா உளறுகிறாய்?

சேகர்: உளறவில்லை! உண்மையைக் கூறுகின்றேன். புஷ்பா இரண்டு மாதக் கர்ப்பிணி!

சரஸ்வதி: நீயும் அந்தப் பேயுடன் சேர்ந்துகொண்டு கூத்தாடுகிறாயே! அவள் மீது உனக்குள்ள மயக்கம் இன்னும் தீரவில்லையா?

சேகர்: அம்மா! உண்மையை மறைக்க முடியுமா? உலை வாயை மூடினாலும் ஊர் வாயை மூட முடியுமா? இது மட்டுமல்ல...... அப்பா செய்திருக்கும் பழியை நினைக்கும் போது வெட்கப்பட வேண்டும். புஷ்பா அப்பாவிற்குப் பிறந்தவளாம்! கமலாவின் மரண வாக்குமூலம் இது.

சரஸ்வதி: நன்றாய் இருக்கிறது கதை! நீ படித்திருந்தும் இந்தக் கட்டுக் கதையை நம்புகிறாயே!

சேகர்: கட்டுக் கதையல்ல. கசப்பான உண்மை!

மோகனா: அத்தான்! இந்த நீலியின் பசப்பு வார்த்தைகளால் தாங்கள் ஏமாந்து போக வேண்டாம். அவள் பலே கைகாரி!

சரஸ்வதி: அப்படியானால் பழி முழுவதையும் உன் அப்பா மீது தான் போடுகிறாயோ?

சேகர்: அப்பாவும் கொலை செய்தவனும் குற்றவாளிகள் தான்!

சரஸ்வதி: சேகர்! எப்படியாவது அவரைக் காப்பாற்ற வேண்டியது உன் கடமை.

மோகனா: அத்தான்! மாமாவை எப்படியாவது விடுதலை செய்யுங்கள்.

சேகர்: கடமை! நான் நீதிபதி! அவர் குற்றவாளி! என் கடமையைச் செய்துதான் ஆகவேண்டும்.

**சரஸ்வதி:** நீ நீதிபதியாய் இருப்பதால் அப்பாவை வெகு எளிதில் விடுதலை செய்ய முடியும். சேகர்! உன் மனதைக் கல்லாக்கிக் கொள்ளாதே.

**சேகர்:** அம்மா! தந்தையைக் காப்பாற்ற நீதியைக் கொலை செய்யச் சொல்லுகிறீர்களா? மாசற்றவர்கள் மீது பழியைச் சுமத்தச் சொல்லுகிறீர்களா? அநாதைகளை அலறும்படி விட்டு விடுவதுதான் நியாயமா?

**மோகனு:** அத்தான்! நீங்கள் தடுமாற்றம் அடைய வேண்டாம். எப்படியாவது மாமாவைக் காப்பாற்ற வேண்டியது உங்கள் பொறுப்பு.

(திரை)

---

## காட்சி: 37 — ஓர் அறை

[மறு நாள் வழக்கு விசாரணை. சேகர் புஷ்பாவைச் சந்திக்கிருன்]

**சேகர்:** புஷ்பா! நான் கொடுத்து வைக்காதவன், உன்னை இக்கோலத்தில் பார்க்க என்ன பாவம் செய்தேனே?

**புஷ்பா:** இனிமேல் வேதாந்தம் பேசுவதில் பயனில்லை. வெந்துபோன என் உள்ளத்தின் வேதனையைத் தாங்கள் எப்படி அறிய முடியும்?

**சேகர்:** புஷ்பா! நான் உன்னை எப்படித் தேற்ற முடியும்? என் தந்தை செய்த பழிக்கு நான் பரிகாரம் செய்யத் தயாராக இருக்கிறேன்.

**புஷ்பா:** பரிகாரம்! என் வாழ்வைக் கெடுத்த அந்த நாகப்பாம்பு செய்யட்டும்!

**சேகர்:** புஷ்பா! என் குடும்ப மானத்தைக் காப்பாற்றும்படி உன்னை வேண்டுகின்றேன்.

**புஷ்பா:** அநாதையாக அலறித் துடித்துக்கொண்டிருக்கும் அபலையாகிய நானு தங்கள் குடும்ப மானத்தைக் காப்பாற்ற முடியும்? தாங்கள் பெரிய நீதிபதி. அவர் தங்களுடைய தந்தை! மிராசுதார்!

சேகர்: புஷ்பா!

புஷ்பா: தங்களுடைய குடும்ப மானத்தைக் காப்பாற்ற என்றுந் தீராத அவமானத்தை நான் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று தானே கூறுகிறீர்கள்?

சேகர்: புஷ்பா! புண்பட்ட உள்ளத்தில் வேல் கொண்டு குத்த நான் விரும்பவில்லை... ஆனால்.

புஷ்பா: ஆனால் என்ன? ... தங்களுடைய தகப்பனார் கொலையில் சம்பந்தப்பட வில்லை என்றுதானே சொல்ல வேண்டும்? என்னைக் கெடுக்கவில்லை என்றுதானே நீதிமன்றத்தில் கூற வேண்டும்? கற்பழித்த கயவனை, கொலை பாதகனைக் குற்றவாளி இல்லை என்று சொல்ல வேண்டும்! அவ்வளவுதானே? என் வாழ்வைச் சிதைத்த அப்பாவி இன்னும் உலகில் வாழ வேண்டுமென்றுதானே விரும்புகிறீர்கள்? பாவம்! தந்தையைக் காப்பாற்ற வேண்டியது தனயனின் கடமைதானே!

சேகர்: புஷ்பா! உன் வார்த்தைகளால் என்னை ஏன் இப்படி வதைக்கிறாய்?

புஷ்பா: அப்படியானால் நான் விபசாரிப் பட்டத்தைச் சூட்டிக்கொள்ள விரும்புகிறீர்கள் அல்லவா?

சேகர்: புஷ்பா! என் மனம் குழப்பமடைகிறது. ஆயினும் நீ நினைத்தால்...

புஷ்பா: நான் இனிமேல் நினைப்பதற்கு என்ன விருக்கிறது? ... சேகர்! ஏழைக்கொரு நீதி, பணக்காரனுக்கு ஒரு நீதியா? படித்தவர்களுக்கு ஒரு சட்டம் பாமரர்களுக்கு ஒரு சட்டமா? தருமத்தை நிலைநாட்ட வேண்டிய தாங்கள் தடுமாற்றம் அடைய வேண்டாம்! எனக்கு நீதி வேண்டும். என் தாயின் அழுகுரல் அவலமாய்ப் போய்விடக் கூடாது.

(திரை)

## காட்சி: 38 — நீதிமன்றம்

[நீதிபதி சேகர் வாடிய முகத்துடன் காணப்படுகிறார். ஒரு பக்கத்தில் ஜூரிகள் உட்கார்ந்திருக்கிறார்கள். மிராசுதாரும், கறுப்பனும் குற்றவாளிக்கூண்டில் நின்றுகொண்டிருக்கிறார்கள். சரஸ்வதி, மோகனு, புஷ்பா இவர்களும் அங்கிருக்கிறார்கள். ஏராளமான மக்கள் குழுமியிருக்கின்றனர்.]

மிராசுதாரின் வக்கீல்: என் கட்சிக்காரர்! இதோ நிற்கும் மிராசுதார் சுந்தரம் பிள்ளை! குற்றவாளியல்ல. இறந்துபோன கமலா என் கட்சிக்காரர் வீட்டில் சுமார் இருபது வருஷங்களாக இருந்து வந்திருக்கிறாள். அவள் அவருடைய குடும்பத்தில் ஒருவளாக எல்லா சௌகரியங்களையும் அனுபவித்து வந்திருக்கிறாள். இதோ நிற்கும் புஷ்பாவையும் தன் சொந்த மகள் போலவே வளர்த்து வந்திருக்கிறார். அப்படியிருக்க புஷ்பா நடத்தைப் பிசகினால் கர்ப்பமாகி விட்டாள். பழியை வெகு சுலபமாக என் கட்சிக்காரர் மீது போட்டுவிட்டாள். ஆத்திரமடைந்த மிராசுதார் தாயையும் மகளையும் வீட்டைவிட்டு வெளியே துரத்தினது மெய்யே. அவர்கள் காட்டு வழியே செல்லும் போது யாரோ காட்டுமிராண்டியால் தாக்கப்படவே கமலா உயிர் துறந்தாள். பழியோரிடம் பாவமோரிடம் என்பது இச்சம்பவத்திலிருந்து எவ்வளவு உண்மை என்பதை நீதிபதி துரையவர்களிடம் எடுத்துரைக்க விரும்புகிறேன். இச்சந்தர்ப்பத்தில் இன்னொரு விஷயத்தையும் நான் கூற விரும்புகிறேன். அதாவது சிற்சில சமயங்களில் இதோ நிற்கும் புஷ்பாவிற்கு மூளைக் கோளாறுகள் ஏற்படுவது உண்டு. ஒரு நாள் மிராசுதாரின் வீட்டின் கொல்லைப் புறத்திலுள்ள கிணற்றில் காரணம் ஒன்றுமில்லாமல் குதித்து விட்டாள். இப்படிப்பட்ட பெண்ணின் வாக்குமூலத்தை எப்படி நம்புவது?

மேலும், கொலை செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்டிருக்கும் கறுப்பன் மிராசுதார்தான் கொலை செய்யச் சொன்னார் என்று சொல்வது பெரும் வியப்பாய் இருக்கிறது. கறுப்பன் சிறையினின்றும் வெளிவந்து இரண்டு மாதங்கள்தான் ஆகின்றன. அவன் இதற்கு முன்னால் இரண்டொரு கொலை, களவு வழக்குகளில் சம்பந்தப் பட்டிருக்கிறான். அவனுக்கும் என் கட்சிக்காரருக்கும் எவ்விதத் தொடர்பும் கிடையாது. மிராசுதாருக்குப் பல பகைவர்கள் உண்டு. இது அவர்கள் சூழ்ச்சி என்று தான் எண்ணவேண்டியதிருக்கிறது. ஆகவே என் கட்சிக்காரர் குற்றவாளியல்ல. நிரபராதி என்பதே என் வாதத்தின் முடிவு.

(நீதிபதி, சர்க்கார் வக்கீலைப் பார்க்கிறார்)

**சர்க்கார் வக்கீல்:** ஜூரிகளே! மிராசுதாருக்காகப் பேசின வக்கீலின் வாதத்தைக் கேட்டீர்கள். யானையை முறத்தால் மறைக்க முடியுமா? புஷ்பா கிணற்றில் விழுந்த சமயம் மிராசுதாரைத் தவிர வேறு யாரும் கிடையாது. அச்சமயத்தில்தான் மிராசுதார் புஷ்பாவை எப்படியோ வஞ்சித்துத் தமது மிருக இச்சைக்குப் பலியாக்கி இருக்க வேண்டும். மேலும் கறுப்பனை மிராசுதாரின் பங்களாவிற்கு அழைத்து வந்த முனிசாமியின் சாட்சியத்தை அலட்சியம் செய்வதற்கில்லை. சூதுவாது அறியாத முனிசாமி உள்ளதை உள்ளபடி அப்படியே சொல்லியிருக்கிறான். கறுப்பனும் இதை ஒப்புக்கொண்டிருக்கிறான். ஆகவே மிராசுதார் குற்றவாளி என்பது தெளிவாகிறது.

**நீதிபதி சேகர்:** (ஜூரிகளைப் பார்த்து) ஜூரிகளின் அபிப்பிராயம் என்ன?

[ஜூரிகள் நீதிபதி உட்கார்ந்திருக்கும் இடத்திற்குப் பக்கத்திலுள்ள சிறு அறைக்குப் போய் ஆலோசனை செய்து முடிவான அபிப்பிராயத்துடன் தம்முடைய ஆசனங்களில் அமருகிறார்கள்]

**ஜூரிகளின் தலைவர் :** இருவரும் குற்றவாளிகளே.

**மிராசுதார் :** நான் சில வார்த்தைகள் கூற நீதிபதியின் அனுமதியைக் கேட்டுக்கொள்கிறேன். (நெற்றியிலுள்ள வியர்வைத் துளிகளைத் துடைத்துக் கொண்டு) நான் குற்றவாளியே! சமூகத்தில் வாழத் தகுதியற்றவன்! பணத் திமிறினால் பாவச் செயல்களைச் செய்த பாதகன்! இன்பமே வாழ்க்கையின் இலட்சியமென இறுமாப்புக் கொண்ட முட்டாள்! (தாமதம்) கனவு போலவும், மின்னலைப் போன்றும், நீர்க்குமிழியைப் போலவும் மறைந்து போகும் சிற்றின்பத்திற்காக நான் செய்த பாவத்தையும், பழியையும், துரோகத்தையும் நான் இப்போது நினைக்கும்போது என் உடல் நடுங்குகின்றது. வெட்கத்தால் தலை குனிய வேண்டியவனாகின்றேன். (தாமதம்) கமலா! பாவம்! இந்தப் பரந்த உலகில் ஆதரிப்பாரில்லாமல் அநாதையாக என்னிடம் அடைக்கலம் புகுந்தாள். என்னைக் கைதூக்கிக் காப்பாற்றும் கடவுளாக நினைத்தாள்! என் காம இச்சையின் பீடத்தில் அவளைப் பலியிட்டேன். அவள் வாழ்க்கையில் பெரும் புயலை உண்டாக்கினேன். அதன் விளைவாகத் தோன்றியவள் தான் புஷ்பா!... என்னால் மானமிழக்கப்பட்டு, வேடனின் அம்புக்கு இலக்காகி நிற்கும் மான்போல்...... அதோ நிற்கிறாளே, அவள்! என் மகள் போன்றவள். அவளைக் கெடுத்த என்னைப் பேய் என்றுதான் சொல்ல வேண்டும். (தாமதம்)

நான் வாழத் தகுதியற்றவன்! என்னைப்போல் சமூகத்தில் எத்தனை மிருகங்கள் இருக்கின்றனவோ? பெண்களின் கற்பெனும் ஆபரணத்தைக் கொள்ளை கொள்ள எத்தனை ஆடவர்கள் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறார்களோ? (தாமதம்) நான் வாழ்ந்தால் உலகமே பாழடைந்து விடும். மக்கள் குலம் மகிமை இழந்து விடும். பெண்கள் குலம்

பெருமை இழந்து விடும். என்னைச் சித்திரவதை செய்து கொன்றாலும் சரியான தண்டனையாகாது... நான் குற்றவாளியே! தண்டனையை எதிர்பார்க்கிறேன்.

நீதிபதி சேகர்: ஜூரிகளின் அபிப்பிராயப்படி மிராசுதாரும், கறுப்பனும் குற்றவாளிகள் என்று தீர்ப்பளிக்கிறேன். மிராசுதாருக்கு ஏழு வருஷக் கடுங்காவல் தண்டனையும் கறுப்பனுக்கு ஆயுள் தண்டனையும் விதிக்கிறேன்.

மிராசுதார்: ஹஹ்ஹ! தந்தை என்று தனயன் தண்டனையைக் குறைத்து விட்டான் போலும்! சமூகத்திற்கே சாபமாக விளங்கும் இச்சரீரம் இனிமேல் ஒரு வினாடியும் உயிருடன் இருக்க முடியுமா? இருக்கக்கூடாது.

[மாடியிலிருந்து கீழே குதித்துத் தற்கொலை புரிய மிராசுதார் ஜன்னலை நோக்கி ஓடுகிறார். இன்ஸ்பெக்டர் கைத்துப்பாக்கியால் அவரை நோக்கிச் சுடுகிறார். மிராசுதார் கீழே விழுகிறார். நீதிமன்றத்தில் குழப்பம் ஏற்படுகிறது]

(திரை)

## காட்சி: 39 சேகரின் இல்லம்

[சேகர் புஷ்பாவைச் சந்திக்கிறான். அவளுடைய உடைந்த உள்ளத்திற்கு ஆறுதல் கூறுகிறான்]

சேகர்: புஷ்பா! வருந்தாதே. அவரை என் தந்தை என்று சொல்லக்கூட நான் வெட்கமடைகிறேன் உன் வாழ்வைச் சிதைத்த வஞ்சகன்! பணத் திமிரினால் பாதகச் செயலைச் செய்த பாதகன்! இப்படி மனித உருவத்தில் உலகத்தில் எத்தனை மிருகங்கள் உலாவுகின்றனவோ? சமூகத்தை அரிக்கும் இப்புழுக்கள் பிறவாதிருந்தால் நலமாய் இருந்திருக்கும்! என் தந்தை பெரும் பாவி! நான் அந்நீசனின் மகன்!

புஷ்பா: தாங்கள் என்ன செய்வீர்கள்? பாவம்! எய்தவனிருக்க அம்பை நொந்து என்ன பயன்?

சேகர்: என் மீதும் என் குடும்பத்தின் மீதும் அழியா அபகீர்த்தியைச் சுமத்தி விட்டார். புஷ்பா! தந்தை, பாதகன்! காமப் பேயன்! பழிகாரன்! மகன், நீதிபதி! நன்ருய் இருக்கிறது!

புஷ்பா: சேகர்! இவ்வளவு அபகீர்த்திக்கும் தங்களுடைய துன்பத்திற்கும் நானல்லவா காரணம்? பெண் குலத்திற்கே பெரும் இழிவையல்லவா உண்டாக்கி விட்டேன்! நான் இனிமேல் என் முகத்தை எப்படி வெளியில் காட்ட முடியும்? (கண்ணீர் விடுகிருள்)

சேகர்: புஷ்பா! அச்சண்டாளன் செய்த சதிக்கு நீயா பொறுப்பாளி? பெண்களைக் கெடுக்க வேண்டுமென்றே ஆடவர்கள் துணிந்து விட்டால் பெண்கள் எப்படித் தப்பிக்க முடியும்? புஷ்பா! நொறுங்கிப்போன உன் வாழ்விற்கு நான் மீண்டும் உயிர் கொடுக்க முடியுமானுல்......

புஷ்பா: தங்களுடைய பரந்த மனதையும் தயாள சிந்தையையும் மெச்சுகின்றேன். தங்களுடைய லட்சியம் நிறைவேற வில்லேயே என்றுதான் நான் வருந்துகின்றேன்- தங்கள் மனக் கோட்டையை உடைத்தெறிந்தவள் நானல்லவா? நான் இனிமேல் வாழத் தகுதியற்றவள்.

சேகர்: புஷ்பா! நீ வாழவேண்டும். மறுபடியும் தளிர் விட்டு செழித்தோங்க வேண்டும். நான் மகிழ்ச்சியடைய வேண்டும்.

புஷ்பா: அது எப்படி முடியும்? செடியிலிருந்து கிள்ளி எறியப்பட்ட மலருக்கு வாழ்வேது? மணம் ஏது? வாடி வதங்கிப் போவதைத் தவிர அதற்கு வேறு கதி ஏது?

சேகர்: புஷ்பா! இந்தத் தொல்லை மிகும் உலகில் எங்குபோய் அல்லற்படப் போகிறாய்?

புஷ்பா: உலகத்தில் பிறந்தும் வாழத் தகுதியற்றவர் களுக்காக விடுதிகளும், ஆச்சிரமங்களும் அமைத்திருக் கிறார்களே! அவைகளுக்குப் பஞ்சமா நம் நாட்டில்? அல்லல் படுவதற்கே அவனியில் அவதரித்திருக்கும் எனக்கு வேறு வாழ்வேது?

சேகர்: புஷ்பா! ஆச்சிரமத்தில் அடைபட்டு வாழவா? கூண்டில் அடைபட்டிருக்கும் குயில் போலவா வாழப் பிரியப்படுகிறாய்? புஷ்பா! என்னை ஏன் கொல்லாமல் கொல்லுகிறாய்?

புஷ்பா: சேகர்! நான் இனிமேல் வெளியில் வந்தால் நம்நாட்டின் பண்பிற்கே பாதகம் ஏற்படும். இந்த அவமானச் சின்னம் அழிந்து போவதில் தாங்கள் ஏன் வருத்தமடைய வேண்டும்?

சேகர்: புஷ்பா! உன் வைராக்ய மனதை நான் மெச்சுகிறேன். உனக்கு நான் என்ன ஆறுதல் கூறமுடியும்? (தாமதம்) என் தந்தை உன்னைக் கெடுத்தாரல்லவா? அதற்காக என்னையும் என் குடும்பத்தையும் சபிக்காதே. உன் பாதங்களைப் பிடித்து மன்றாடுகின்றேன். இதுவே என் கடைசி வேண்டுகோள் (பாதங்களைப் பிடிப்பதற்குக் குனிகின்றான்)

புஷ்பா: சேகர்! என்ன காரியம் செய்யத் துணிந்தீர் கள்? நீதியின் இருப்பிடத்தில் உட்காரும் தாங்கள், நீசச் செயலைச் செய்த இந்தப் பாவியின் பாதங்களைத் தொடா தீர்கள். என்னைத் தொட்டுத் தங்களின் புனித கரங்களைக் கறைப்படுத்த வேண்டாம்.

சேகர்: புஷ்பா! உனக்கு நேர்ந்த பெரும் பழிக்கு—உன் அழிந்த வாழ்விற்கு—வேறு நான் என்ன சமாதானம் கூறமுடியும்?

புஷ்பா: நடந்து போனதை மறந்து விடுங்கள். கடைசியாகத் தங்களை ஒன்று மட்டும் மிகவும் கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன். தயவு செய்து என் வேண்டுகோளைத் தாங்கள் புறக்கணிக்கக் கூடாது.

சேகர்: புஷ்பா! நீ என்ன சொன்னாலும் செய்யத் தயார். எதை வேண்டுமானாலும் கேள்.

புஷ்பா: தங்களின் அன்பை அடைய மோகனா அக்காவின் நெஞ்சம் அலறிக் கொண்டிருக்கிறது. தங்களுடைய புன்முறுவலைப் பெற அவள் வாடிவதங்கிக் கொண்டிருக்கிறாள். அவளுடைய வாழ்க்கையை நீங்கள் இன்புறச் செய்ய வேண்டுமென்பதே என் ஆசை. இது தான் என்னுடைய கடைசி வேண்டுகோள். (மோகனா அங்கு வருகிறாள்) இதோ, அக்கா வந்து விட்டாள்! சேகர்! இப்புண்ணியவதியை ஏற்றுக்கொள்ளுங்கள். (மோகனாவின் கரத்தைப் பற்றிச் சேகரின் கரத்தில் வைக்கிறாள்) நீங்கள் இருவரும் இன்பமாக வாழ விரும்புகிறேன். இனிமேல் என்னை மறந்து விடுங்கள். போய் வருகிறேன் (வேகமாகப் போகிறாள்)

சேகர்: (அவளைப் பின் தொடர்ந்து) புஷ்பா! நீ எங்கே போகிறாய்? மண்ணிலே பிறந்து, மண்ணிலே மலர்ந்து, மண்ணிலே மடியும் மலரைப் போலல்லவா போய் விட்டது உன் வாழ்க்கை!

முற்றும்.

ஸ்ரீ லெக்ஷ்மி பிரஸ், திருநெல்வேலி ஜங்ஷன்.—படிகள் 1000

கைதேர்ந்த நிபுணர்களின் உதவியால் நாங்கள் லித்தோவில் சிறந்த அச்சு வேலைகள் செய்ய முடியும் என்று உத்திரவாதமளிக்கிறோம். கண்ணைக் கவரும் வர்ணமுள்ள காலண்டர்களும், போஸ்டர்களும், எண்ணெய், சோப், பீடி, தீப்பெட்டி முதலியவைகளை விளம்பரப்படுத்த லேபிள்களும் சினிமாப் போஸ்டர்களும் திருப்திகரமாகச் செய்து கொடுக்கப்படும். மேலும் அச்சு வேலைகளுக்கு அவசியமான மை, மற்றும் சாதனங்களும் எங்களிடம் கிடைக்கும்.

**தி நேஷனல் லித்தோ பிரஸ்**

**சிவகாசி**